ஸ்ரீ:

பிள்ளையுலகாசிரியர் திருத்தம்பியாரான

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்

அருளிச்செய்த

# ஆசார்ய ஹ்ருதயம்

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர்

எழுதிய

## தாத்பர்யஸாரத்துடன்

கூடியது

கிடைக்குமிடம்:

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

சென்னை பி. என். கே. அச்சுக்கூடத்தில்

அச்சிடப்பட்டது

1946

விலை 1—10—0.

ஸ்ரீ:

## ஆசார்யஹ்ருதய சூர்ணிகைகளின்

# அகராதிக் குறிப்பு

[லக்கம் - சூர்ணிகைகளின் வரிசை லக்கம்]


அங்கீகரிக்க அவகாசம் 186
அங்கு நம்பிசரணென்று 192
அச்சேத்ய மென்னுமது 132
அஜ்ஞா ப்ரமிக்கிற 86
அடிதொழுதெழென்ற 213
அடியோம் தொடர்ந்து 120
அணையவூரப்புனைய 87
அதவா வேதவேத்ய 70
அதாவது மயர்வற 97
அதில் ஸம்ஸ்க்ருதம் 40
அதில் ஸித்ததர்மவிதி 193
அது ஐவரை வெல்வித்து 191
அதுக்கு மூலம் யான் 93
அதுக்கு மூலம் "விதயச்ச" 66
அதுக்கு ஹேது 94
அது தத்வோபதேசம் 190
அதுதானும் ஆஸ்திக்ய 15
அத்யயநஜ்ஞாநாது 37
அத்ரி ஜமதக்நி 92
அநந்தக்லேச 5
அந்தணர் மறையோர் 34
அபிலாஷா சிந்தநாது 136
அருள் முடிய 29
அவகாஹித்தாரை 176
அவர்களுக்குக் காயோடே 60
அவன் முனிந்தார்க்கு 197
அவித்யாநிவர்த்தக 234
அழுநீர் துளும்ப 61
அழும் தொழும் 127
அறியாதார்க்கு 196
அளிப்பானடியேன் 209
அன்றிக்கேஸ்வரூபகுண 54
ஆசறுதூவியென்னும் 154
ஆதித்யராமதிவாகர 83
ஆப்திக்கு இவர் 67
ஆவாவென்று தானே 223
ஆற்றில் துறையில் 80
இடகிலேன் நோன்பறிவி 102
இதின் ஔபாதிகத்வம் 89
இது உபயமுமன்றிக்கே 101
இந்த உட்பொருள் 38
இந்த வுதிரத்தரிப்பு 13
இப்பிறப்பே சிலநாளில் 103
இயற்பா மூன்றும் 50
இரானெனில் நசவாக 125
இருத்துமெண்டானாய் 202
இருந்தமையென்றது 231
இருள் துயக்குமயக்கு 98
இவர்கள் தேடிநிற்க 124
இவற்றால் வரும் 116
இவற்றாலே ஸாதாரணம் 30
இவற்றில் ப்ராவண்யம் 187
இவற்றுக்குக் காரணம் 6
இவற்றுக்கு மந்த்ர 208
இவற்றுக்கு மூலம் 8
இவற்றுக்கு விதிராகங்கள் 27
இவற்றுக்கெல்லை 4
இவன் நடுவே 112
இவை கிட்டமும் வேட்டு 11
இவை ஜ்ஞாநதர்சன 233
இவை ஸ்வரூபத்தை 20
இறுகலிறப்புக்கும் 143
இன்பு மன்பும் முற்படுவது 122
ஈசனையீசனீசன் 222
உண்ணாது கிடந்தோர் 123
உதாத்தாதி பதக்ரம 69
உபயப்ரதாநப்ரணவ 161
உயிர் மாய்தல் 200
உறக்கம் தலைக்கொண்ட 49
உருமையோடே 229
ஊரார் நாட்டார் 142
ஐந்தினோடொன்பதோடு 215
எண்டிசையுமகல் 227
எண்ணிலாக் குணங்கள் 225
எண்ணிலும் வரும் 109
எவ்வுலகத்தெவ்வெவையும் 39
எழுவதோருரு 130
எற்றைக்குமென்றது 129
என்பெறுதியென்ன 152
என்னதுன்னதாவியிலே 201
என்னையும் யாவர்க்கும் 224
ஏதந்நிமித்தம் முன்னமே 10
ஒரு தலையில் க்ராமகுலாதி 35
ஒன்று கூடினதாய் 12
கடிதகடகவிகடநா 168
கண்வலைப்படாதே 153
கதிர்ஞானமூர்த்திக்கு 199
கமலக்கண்ணனென்று 230
கருவுள் வேறலாமை 57
கர்மக்ருபாபீஜம் 9

[லக்கம் - சூர்ணிகைகளின் வரிசை லக்கம்]


| | |
|---|---|
| கர்மகைங்கர்யங்கள் | 26 |
| கலை வளை அறம் | 147 |
| கல்பாதியில் தோற்றிற்று | 55 |
| களைகணற்றுரை | 164 |
| காருணிகனை | 1 |
| கிழைமேலை வடக்கிலவை | 141 |
| குழலில் நெஞ்சும் | 128 |
| கைம் முதலிழந்தார் | .169 |
| கோஸலகோகுல | 105 |
| குருசிஷ்ய க்ரந்த | 64 |
| கோவ்ருத்திக்கு | 96 |
| க்யா திலாபபூஜா | 205 |
| க்ருஷ்ணக்ருஷ்ணத்வைபா | 77 |
| சதுர்விதமான | 16 |
| சந்தோகனென்று | 52 |
| சரண்ய முகுந்தத்வம் | 181 |
| சாதுசனம் நண்ணு | 214 |
| சாஸ்த்ரிகள் தெப்பக் | 19 |
| சிறு சீரார்சுளகு | 144 |
| சுரிகுழல் அஞ்சன | 228 |
| சூழ்ச்சி அகற்றினீரெ | 138 |
| செந்திறத்த தமிழ் | 41 |
| செய்த நன்றி | 108 |
| சென்று சேர்வார்க்கு | 170 |
| சேர்ப்பாரைப் பக்ஷி | 150 |
| சேஷத்வபஹிர்ப்பூத | 88 |
| சேஷத்வ போக்த்ருத்வ | 21 |
| சொல்லப்பட்ட வென்ற | 46 |
| சோராத மூவா | 220 |
| ச்ரமணீ விதுர | 95 |
| ச்ரம மனம் சூழும் | 173 |
| ஜநகதசரதவஸுதேவ | 82 |
| ஜந்மாந்தரஸஹஸ்ர | 99 |
| ஜாத்யாச்ரமதீக்ஷைகளில் | 31 |
| ஜ்ஞாநசதுர்த்திகளின் | 22 |
| ஜ்ஞாநத்தில் தம்பேச்சு | 118 |
| தமருகந்த அடியோமு | 158 |
| தமிழ் மாமுனிதிக்கு | 91 |
| தம்பிழையும் சிறந்த | 156 |
| தர்மவீர்ய ஜ்ஞானத்தாலே | 58 |
| தாய்க்கும் மகனுக்கும் | 204 |
| தாயாரேதலர் | 139 |
| தேவத்வமும் நிந்தையான | 81 |
| தேவிமார் பணியாநேர் | 226 |
| தேறும் கலங்கி | 119 |
| தோல்புரையே போமது | 18 |
| தோழிமாரன்னையர் | 135 |
| த்யாஜ்ய தேஹவ்யாமோஹம். | 185 |
| த்யாஜ்யோபாதேயங்கள் | 3 |
| த்வயார்த்தம் தீர்க்க | 210 |
| நண்ணாதார் மெய்யிலூன் | 203 |
| நலமருளினன் | 114 |
| நால்வேதம் கண்ட | 47 |
| நாலயலார் அயற்சேரி | 140 |
| நாவில் ஒன்று ப்ரவர்த்தகம் | 24 |
| நிலாமுற்றம் ப்ரஜ்ஞா | 146 |
| நீர்பால் நெய்யமுதாய் | 188 |
| பகலோலக்கமிருந்து | 157 |
| பகவத் பக்தபரங்கள் | 217 |
| பகவன் ஞானவிதி | 194 |
| பட்டத்துக்குரியவாளையும் | 106 |
| பட்டம் சூடகமாவன | 148 |
| படைத்தான் கவியென்ற | 48 |
| பந்துகழல் பாவை | 149 |
| பரத்வ காரணத்வ | 218 |
| பரபரனாய் நின்ற | 219 |
| பரமஸாத்வத்தோடே | 56 |
| பலஸாதந தேவதாந்தர | 62 |
| பாட்டுக்கு க்ரியையும் | 216 |
| பாரத கீதைகளின் | 68 |
| பாஷ்யகாரர் இதுகொண்டு | 65 |
| பிரிந்த துன்பக்கடல் | 180 |
| பிரியில் இலேனுக்கு | 126 |
| புணர்தொறுமென்ன | 115 |
| புண்ணியம் பாவம் | 117 |
| புரவியேழொரு காலுடைய | 53 |
| பூண்டநாள் சீர் | 155 |
| பெருக்காறு பலதலைத்து | 131 |
| பெரும்பாழில் க்ஷேத்ர | 104 |
| பெரும் புறக்கடலும் | 74 |
| பெற்றும் பேறிழந்தும் | 78 |
| பேச்சுப் பார்க்கில் கள்ள | 76 |
| போக்ய பாகத்வரை | 177 |
| போகத்தில் தட்டுமாறும் | 178 |
| ப்ரவண சித்தம் | 171 |
| ப்ரஹ்ம நிஷ்டரும் | 206 |
| ம்ருத்கடம் போலன்றே | 73 |
| ம்லேச்சனும் பக்தனானால் | 85 |
| மண்டினாரும் மற்றை | 28 |
| மண்ணாடின ஸஹ்ய | 71 |
| மண்ணோர் விண்ணோர் | 160 |
| மதியால் இசைந்தோம் | 110 |
| மயில் பிறைவில் அம்பு | 137 |
| மனம் செய் எல்லையில் | 189 |
| மஹாத்மாக்கள் விரஹம் | 179 |
| மஹாமதிகள் அச்சம் | 174 |
| மாதவன் மலை | 111 |
| மார்க்கபந்து சைத்யம் | 182 |

[லக்கம் - சூர்ணிகைகளின் வரிசை லக்கம்]


| | | | |
|---|---|---|---|
| மாலை கங்குல் காலை | 145 | வித்யை தாயாகப் பெற்று | 121 |
| மாவுருவில் கள்ளவேடம் | 90 | விப்ரர்க்கு கோத்ரசரண | 36 |
| மீன நவநீதங்கள் | 79 | விவேக பலம் | 2 |
| முடிந்த அவாவென்றது | 232 | விவேக முகராய் | 151 |
| முந்நீர் வாழ்ந்தார் | 107 | விளம்ப விரோதம் | 167 |
| முனிவரையிடுக்கியும் | 17 | வீட்டின்ப வின்பப்பாக்களில் | 75 |
| முழுதுமாய் எங்க | 221 | வேத சதுஷ்டயாங்க | 43 |
| முற்பாடர்க்கு க்ரியா | 25 | வேதநூல் இருந்தமிழ் நூல் | 45 |
| முளைத்தெழுந்த | 23 | வேத வித்துக்களும் | 33 |
| மூன்றில் சுருக்கிய | 211 | வேதவேத்ய வைதிகோப | 195 |
| மெய்ந்நின்று மங்கவொட்டு | 207 | வைஷ்ணவவாமநத்தில் | 162 |
| மெலிவிலும் சேமம் | 165 | வ்யவஸாயஜ்ஞர் | 166 |
| மேகம் பருகின | 72 | ஸகல வித்யாதிக வேதம் | 44 |
| மோக்ஷதானத்தில் | 184 | ஸகி வெறி விலக்கி | 134 |
| ரஹஸ்யத்துக்கு | 212 | ஸத்வாஸத்வ நிதானம் | 7 |
| ராமாயணம் நாராயண | 63 | ஸம்பந்தோபாய பலங்களில் | 133 |
| ருக்கு ஸாமத்தாலே | 51 | ஸைந்ய புத்ரசிஷ்ய | 183 |
| ருசிவிவசர்க்கு | 163 | ஸாதநஸாத்யங்களில் | 32 |
| வடமொழி மறை | 42 | ஸாதநஸாத்யஸ்த | 198 |
| வத்ஸலையான மாதா | 14 | ஸாதரரைப் பரிசழிக்கும் | 172 |
| வம்சபூமிகளை யுத்தரிக்க | 84 | ஸாத்யஹ்ருதிஸ்த்தமாயும் | 175 |
| வரவாறில்லை வெறிதே | 113 | ஸ்வாத்யாய யோகங்களை | 59 |
| வன்பெருவானக | 159 | ஸ்வீக்ருத வித்த ஸாதநர் | 100 |


ஆசார்யஹ்ருதய சூர்ணிகை

**அகராதிக் குறிப்பு**

முற்றிற்று.

## ஓர் முக்கிய அறிவிப்பு

முமுக்ஷுப்படி, ஸ்ரீவசநபூஷணம், தத்வத்ரயம், ஆசார்யஹ்ருதயம் இந்த நான்கு ரஹஸ்யங்களையும் ஒரு பிழையுமின்றிக் கண்ட பாடமாக்கிப் பரீக்ஷை கொடுத்துத் தேறுமவர்களுக்கு 75 ரூ. பரிசளிக்கப்படும். பரீக்ஷா ஸ்தலம் காஞ்சீபுரம் நம்பிள்ளை ஸந்நிதி. இதில் விருப்பமுடையவர்கள் நமக்கெழுதிப் பரீக்ஷா நிபந்தனைப் புத்தகம் வரவழைத்துப் பார்க்க.

**ப்ர. அண்ணங்கராசாரியர்.**
காஞ்சீபுரம்.

## ஆசார்ய ஹ்ருதயத்தில் அருளிச் செய்யப்பட்டுள்ள விஷயங்களின் ஸங்க்ரஹம் வருமாறு :—

ஸாராஸார விவேகம் பண்ணுகைக்கு எம்பெருமான் சாஸ்த்ரங்களை யருள்செய்தது.

அந்த சாஸ்த்ரங்களிஞல் தத்வஜ்ஞானம் பிறப்பதன் அருமையை நோக்கி ஸகல சாஸ்த்ர தாத்பர்யமான திருமந்த்ரத்தை வெளியிட்டருளினது.

சாஸ்த்ரங்களினுடைய அவற்றின் தாத்பர்யமான திருமந்த்ரத்தினுடையவும் விஷய பேதம் முதலியன.

அவையிரண்டிலும் ஊற்றமுடைய அதிகாரிகளின் ப்ரகாரங்கள்.

அந்த வியாஜத்தாலே ப்ரஸ்துதமான திருவாய்மொழியின் வைபவம்.

அதுக்கு வக்தாக்களான ஆழ்வார்களின் பிரபாவம்.

அந்த ப்ரபாவத்துக்கு மூலமான பகவந்நிர்ஹேதுக கடாக்ஷம்.

அந்த கடாக்ஷமடியாக இவர்க்குண்டான ஜ்ஞாந பக்திகள்.

அந்த ஜ்ஞாநபக்தி தசைகளில் இவர் பேசும் பேச்சுக்கள்.

அந்த பக்தி தசையில் பகவத்ப்ரேமயுக்த ரெல்லாரோடும் இவர்க்குண்டான ஸாம்யம்.

அந்த பக்தி தசையில் பேசும் அந்யாபதேசங்களுக்கு ஸ்வாபதேசங்கள்.

அந்த பக்திக்கு இலக்கான திவ்ய தேசங்களில் நிற்கிற எம்பெருமானது குண விசேஷங்கள்.

அந்த குணங்கள் மலிந்த எம்பெருமானை யநுபவித்து அவ்வநுபவம் உள்ளடங்காமே புறவெள்ளமிட்டு திவ்ய ப்ரபந்தங்கள் அவதரித்தமை.

பொருளொற்றுமையிஞல் கீதைக்கும் திருவாய்மொழிக்குமுள்ள ஸாம்யம்.

கீதையிற் காட்டிலுமுண்டான ஏற்றம்.

இதில் ஆழ்வாருபதேசிக்கிற விஷயபேதம்.

அவ்வோவிஷயங்கள்தோறு முபதேசிக்கிற அர்த்த விசேஷங்கள்.

அந்த வ்யாஜத்தாலே உபதேசத்திற்கு இலக்கான சிஷ்யனது லக்ஷணங் கூறுதல்.

அந்த லக்ஷணமில்லாதார்க்கும் இவர் உபதேசிக்கைக்கு ஹேதுக்களும், உபதேசம் பலித்தமையும்.

உபதேசிக்கிற இத்திவ்ய ப்ரபந்தங்கள் ரஹஸ்யத்ரயார்த்தமென்பது.

அந்த ரஹஸ்யத்ரயத்திலும் ப்ரதிபாதிக்கப்படுகிற அர்த்த பஞ்சகமும் இப்பிரபந்தங்களிலே ஸங்க்ரஹ விவரணரூபேண சொல்லப்படுகின்றமை.

ப்ரபந்தாரம்பங்களில் வேண்டிய மங்களாசரணங்கள் இப்ப்ரபந்தாதியிலுண்டானமை.

ஸாதுபரித்ராணாதிகளாலே ஜகத்ரக்ஷணார்த்தமான ஸர்வேச்வராவதாரம் போலே இப்ப்ரபந்தாவதார மென்பது.

இதில் பத்துப்பத்தாலும் பிரதிபாதிக்கப்பட்ட ஈச்வரனுடைய பரத்வாதி குணங்கள்.

அக்குணக்கடலானவன் இப்பத்துப்பத்தாலும் ஆழ்வார்க்கு தத்வஜ்ஞாநம் முதலாக ப்ராப்திபர்யந்தமாகப் பிறப்பித்த தசா விசேஷங்கள்.

பத்துத்தோறும் இவர் தாம் பிறர்க்கு உபதேசித்த ப்ரகாரங்கள்.

இவர்க்கு முதலிலேயே ஆர்த்தி பிறந்திருக்கச் செய்தே ஈச்வரன் இவரை இங்கு வைக்கைக்கு ப்ரதாந அப்ரதாந ஹேதுக்கள்.

இவர்க்குப் பிறப்பித்த பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளாகிற தசா விசேஷங்கள் தோன்றுமிடங்கள்.

திருவாய்மொழியாயிரத்தின் ஒன்றான தாற்பரியத்தைக் கூறி நிகமித்தல்.

# முகவுரை

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு அணிவிளக்காக அவதரித்துள்ள அநேக க்ரந்தங்களுள் ஆசார்ய ஹ்ருதயமென்னும் இந்த க்ரந்தத்தின் அருமை பெருமைகள் அளவிட்டுச் சொல்ல முடியாதவை. வேதம் போலே இந்த திவ்யக்ரந்தமும் ஸ்வயம் வ்யக்த ப்ராதுர்ப்பாவவிசேஷம் என்றே சொல்லலாம்படி யிரா நின்றது. அறிவிற் சிறந்த ஆரியர்கள் அனுபவித்தே அறிய வேண்டியதான இதன் பெருமையை அறிவிலியான அடியேன் எடுத்துரைக்கப் புகுவது அபஹாஸ்யமாகும்.

இந்த நாடறிய மாறன்மறைப்பொருளை நன்குரைத்த ஈடு முப்பத்தாறாயிரமென்று ஸுப்ரஸித்தமான பகவத்விஷய மஹா க்ரந்தத்தை அருளிச்செய்தவரான வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கு இரண்டு திருக்குமாரர்கள்; பிள்ளை லோகாசார்யர் மூத்தவர்: அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் இளையவர். இவ்விருவரும் நைஷ்டிக ப்ரஹ்மசாரிகளென்று பெரியோர் பணிப்பர். இவ்விரண்டு ஆசார்ய சிகாமணிகளும் நம் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்குச்செய்தருளின பேருதவிகளைச் சொலப்புகில் வாயமுதம் பரக்கும், இருவினை பற்றறவோடும்.

ஸ்ரீவசநபூஷணம் முதலிய அஷ்டாதச ரஹஸ்யக்ரந்தங்கள் பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்தவை ஸுப்ரஸித்தங்கள். அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச்செய்தவை திருப்பாவைக்கு ஆறாயிரப்படி வியாக்கியானம், அமலனாதிபிரான் வியாக்கியானம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம், பட்டோலை, அருளிச்செயல் ரஹஸ்யம், ஆசார்ய ஹ்ருதயம் முதலியன.

இவற்றுள் ஆசார்ய ஹ்ருதயம் பலபடியாலும் ஒப்புயர்வற்றது. வைதிக ஸந்தானத்துக்கு ப்ரதமாசார்யரான நம்மாழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக்கருத்துக்களைத் தெளிய வெளியிடுகையாலே இதுதனக்கு ஆசார்ய ஹ்ருதயமென்று திருநாமமாயிற்று. ஸகல ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களும் ஆழ்வாரருளிச்செயல்களும் அவற்றின் வியாக்கியானங்களும் எல்லாம் ஒருங்கே திரண்டு இவ்வாசார்ய ஹ்ருதயக்ரந்தமாக வடிவெடுத்ததென்றால் இது இறையும் அதிசயோக்தியாகாது. இதின் அர்த்தங்களை ஆழ்ந்து அறிந்து அநுபவித்து ஆனந்திப்பதென்பது ஒருபுறமிருக்கட்டும்; மூலமாகிய சொல்தொடைகளை மாத்திரம் கண்டபாடமாக்கி அநுஸந்தித்தால் அதன் இனிமையே அப்ரமேயமானது. ‘செவிக்கினிய செஞ்சொல்’ என்பது இதற்கே மிகத்தகும்.

இதனைக் கண்டபாடமாக்கி அநுஸந்தித்துவரும் முறைமை ஆழ்வார்திருநகரி வானமாமலை ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பிராந்தங் களில் விசேஷமாக வுள்ளதேயன்றி மற்ற விடங்களில் அவ் வளவு சிறப்பாகக் காணவில்லை. முமுக்ஷுப்படி ஸ்ரீவசந பூஷணம் முதலிய ரஹஸ்யங்களின் ப்ரசாரமே அருமையான விடங்களில் ஆசார்ய ஹ்ருதயத்தின் ப்ரசாரம் அருமையுற்றிருக் கின்ற தென்றால் இதில் வியப்பொன்றுமில்லை.

உபய வேதாந்த ரஹஸ்யக்ரந்த காலக்ஷேபங்களை நிர்வஹிக் கும் பெரியோர்களும் ஆசார்ய ஹ்ருதயத்தில் வந்தவாறே சிரமப் படவேண்டிய நிலைமையைப் பெரும்பாலும் காணுகின்றோம். வடமொழி தென்மொழிக்கடல்களில் பரிபூர்ணமான அவகா ஹநமுள்ளவர்க்கன்றி மற்றையோர்க்கு இந்த அரும்பெரும் பிர பந்தம் நிலமாவது அரிதே; ரஸிக்கவும் மாட்டாது.

இந்த க்ரந்தத்தை வியாக்கியானத்துடன் பலகால் ஸேவித் துப் பன்முறை பிரவசனம் செய்தருளின மஹான்களுள்ளும் மூலத்தின் பொருளை முகஸ்தமாகச் சொல்லவல்லவர்கள் மிகச் சிலரே யிருக்கக்கூடும். “ஒரொருவருண்டாகி லத்தனைகாண்.”

மூலத்தைக் கண்டபாடம் செய்திருக்கின்ற பலரையும் அடி யேன் பரீக்ஷித்துப் பார்த்திருக்கின்றேன்; நெடுநாளைக்கு முன்பு அச்சிட்டிருக்கின்ற மூலப் பதிப்புகளில் காண்கிற அபத்தங்க ளெல்லாம் அந்தக் கண்ட பாடத்திலும் பெரும்பாலும் அப்படி யேயுள்ளனவென்று கண்டேன். அடியேனும் இளமையில் பல வகையான அபத்தங்களுடனே இதைக் கண்டபாடம் செய்தேன். [சந்தை சொல்லிக் கொடுத்தவர் கற்பித்த புத்தக பாடத்தை அப்படியே கொண்டேன்.] அடியேனுக்கு பகவத்விஷய ரஹஸ் யாதிகளை யுபதேசித்தருளின உலகம் நிறைந்த புகழாளரான ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. அழகிய மணவாள ராமாநுஜஜீயர் ஸ்வாமி இவ்வாசார்ய ஹ்ருதய வியாக்கியானத்தை ப்ரவசனஞ் செய்தருளுங்காலத்தில் திருமேனியில் மிகமிகத் தளர்ச்சியுற் றிருந்ததனால் அப்பேராசிரியர் திருவடிகளில் இதனை ஸாங்கிக்ஷித மாக க்ரஹிக்க பாக்கியமிழந்தேன். ‘எதிர்க்கோட்டை அப்பனை யங்கார்ஸ்வாமி’ என்று ப்ரஸித்தரான வொரு மஹான் ப்ரஹ்ம சர்யாச்ரமத்திலேயே யாவஜ்ஜீவம் எழுந்தருளியிருந்து ஸம்ப்ர தாயக்ரந்தங்களை மிக ஆச்சரியமாக ப்ரவசனஞ் செய்தருளினா ரென்று கேட்டிருந்ததுண்டு. அந்தஸ்வாமி திருவாலியில் சில காலம் எழுந்தருளியிருந்து ஸம்ப்ரதாயக்ரந்தங்களை ப்ரவசனஞ் செய்தருளுகிற அடைவிலே இவ்வாசார்ய ஹ்ருதயத்தையும் நிர வத்யமாக நிர்வஹித்தருளினாராம். அவருடைய ஸ்ரீபாதத்திலே கேட்ட திருவாலி பரவஸ்து ராமாநுஜாசாரியர்ஸ்வாமி யென் பவர் அடியேனுக்கு உயிரினுமாற்ற வினிய நண்பராயிருந்தபடி யால் ஒருகால் அவர் காஞ்சிக்கு எழுந்தருளியிருந்தபோது, தம்

ஆசிரியரான அப்பன்ஸ்வாமி திருக்கையால் எழுதியருளின ஆசார்ய ஹ்ருதயமூல ஸ்ரீகோசத்தைக் காட்டியருளினர். அதை ஸேவிக்கையில் பலவிடங்களில் மிகவினிய நல்ல பாடங்களைக் கண்டு உள்ளம் பூரித்து அந்தத் திருவாலி பரவஸ்து ஸ்வாமி யிடத்தில் ஆசார்யப்ரதிபத்தி பண்ணினேன்.

நல்ல பாடங்களைக் காட்டினாலுங்கூட ரஸிக்கமாட்டாதவர் களும் அநாதிவாஸநாபலத்தாலே ஆக்ரஹப் படுகிறவர்களும் எக்காலத்திலும் எந்நாட்டிலு முளர். இற்றைக்கும் பலரால் ஆதரிக்கபபடுகிற தவறுன பாடங்களில் சிலவற்றை யெடுத்துக் காட்டி, அங்கு இருக்கவேண்டிய யுக்தமான பாடங்களையும் குறிப்பிடுகிறேன். ரஸிகர்கள் கண்டு ரஸிக்கவேணும். கூடிய மட்டில் திருத்தமான பாடங்களையே கொண்டிருக்கும் மஹான் களும் குறிக்கொள்க.

1. முதல் சூர்ணையில் "உணர்வெனும் சுடர்விளக் கேற்றி" என்கிற பாடம் அச்சுப் பிரதிகளிலும் கண்ட பாடங்களிலும் வந்திருக்கிறது. இங்கு 'உணர் வெனும்' என்பது பிசகு; 'உணர் வென்னும்' என்றிருக்க வேண்டும். எப்படியிருந்தாலென்ன? பொருள் ஒன்றுதானே யென்று அவலீலையாகச் சொல்லிவிடுவர் பலர். இந்த ரஹஸ்யத்தில் ஸ்ரீ ஸூக்திகளெல்லாம் பெரும் பாலும் அருளிச்செயல்களே யாதலால் எந்தப் பாசுரத்தை யுட் கொண்டு 'உணர்வெனும்' என்கிற இந்த ஸ்ரீஸூக்தி அவதரித் துள்ளதென்று பார்க்கவேணும். * வாடினேன் வாடியில் * உணர் வெனும் பெரும்பதம் தெரிந்து என்பதை யுட்கொண்டு இது அவதரித்த தென்று ஸஹஸா சொல்லிவிடுவர்கள். இதுவே உண்மையானல் இங்குப் பாடத்திருத்தம் வேண்டியதில்லை தான்; அந்தப் பாசுரத்திற்கு இங்கு ப்ரஸக்தி லேசமுமில்லை பின்னையோ வென்னில்; "உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி" என்கிற மூன்றுந் திருவந்தாதிப் பாசுரமே இங்கு விஷயவாக்ய மாதலால் அதிலுள்ளபடியே "உணர் வென்னும் சுடர்விளக் கேற்றி" என்றுதான் பாட மிருக்கவேண்டும். தொகுத்தல் விகாரம் இங்கு அப்ரஸக்தம்.

2. ஆறுவது சூர்ணையில் "இவற்றுக்குக் காரணம் இரண்டி லொன்றில் ஒன்றுகைகள்"—என்பது தவறுனபாடம். "முக் குணத் திரண்டவையகற்றி, ஒன்றினில் ஒன்றி நின்று" என்கிற திருவெழு கூற்றிருக்கைப் பாசுரம் இங்கு விஷயவாக்ய மாதலால் 'ஒன்றினில்' என்றே பாடமிருக்க வேண்டும்.

3. பதினைந்தாவது சூர்ணையில் 'ஆஸ்திக்யம் விவேகம்' என்று தனித்தனிப் பதமான பாடம் பிசகு; இது அந்வயியாது. "ஆஸ்திக்ய விவேகாந்ய சேஷத்வ...," என்று ஸமஸ்தமாக இருக்கவேணும்.

4. இருபதாவது சூர்ணையில் "உணர்ந்துணர்ந்துணர்வும்.... மிகவுணர்வு முண்டாம்" என்கிற பாடம் மிகவும் தவறு. சிறிதும் அந்வயியாது. உணர்வு உண்டாகுமென்று இங்குச் சொல்லுகிற தன்று. சூர்ணையின் தொடக்கத்தில் இவை என்றிருக்கிறது. அதுவே எழுவாய். கீழ்ச் சூர்ணையில் சொன்ன ப்ரவ்ருத்தியும் நிவ்ருத்தியும் உண்டாம் என்றபடி. அவை எதனாலேயுண்டாம் என்னில், அந்த ஹேதுக்களைச் சொல்லுகிறது இந்த சூர்ணை. "ஸ்வரூபத்தை உணர்ந்துணர்ந்துணரவும் உணர்வைப்பெறவூர மிகவுணரவுமுண்டாம்" என்பது திருத்தமான பாடம். உணர— உணர்வதனாலே என்றபடி.

5. முப்பத்தைந்தாவது சூர்ணையில் "குலந்தரு மென்றும் மாசில் குடிப்பழி யென்றும்" என்பது தவறானபாடம். 'குலந்தரு மென்கிற பாட்டிற் கூறியபடியே கிடைக்கிற மாசில் குடிக்குப் பழியாகுமென்கிற காரணத்தினால்' என்று இங்கு விவக்ஷிதமான பொருளாதலால் "குலந்தரு மென்னும் மாசிற் குடிப்பழி யென்று" என்பது திருத்தமான' பாடம்.

6. சூ. 36ல் "கோத்ரஸூத்ர சரணகூடஸ்தர்" என்பது "கோத்ர சரணஸூத்ர கூடஸ்தர்" என்றிருக்கத்தக்கது. இந்த க்ரமத்திலேயே மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் அவதரித் திருப்பதனால்.

7. சூ. 37ல் "அறியக்கற்று வல்லரானல்"—'வல்லாரானல்' என்றிருக்கவேணும். ஆழ்வார் ஸ்ரீஸூக்தி அங்ஙனே யிருக்கையாலே.

8. சூ. 49ல் "சொல்பயிற்றிய வேதம்" என்பது தவறு. "சொல்பயிற்ற, வேதம்" என்பது திருத்தமான பாடம் சொல் பயிற்ற—கற்பித்ததனாலே என்றபடி.

9. சூ. 54ல் "ஸ்வரூப ரூபகுணவிபூதி...." இங்கே 'ரூப' என்பது சேராது; 'ஸ்வரூப குணவிபூதி' என்றிருக்கவேணும்.

10. சூ. 57ல் "கருவுள் வேறிலாமை"—வேறலாமை என்பது திருத்தமான பாடம். "நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும்" என்பது மூல ஸ்ரீஸூக்தியாதலால்.

11. சூ. 60ல் "காயோடென்னுமவையே" என்பதில் 'என்னுமிவையே' என்று திருத்தவேணும்; "வீழ்கனியு மூழிலையுமென்னுமிவையே நுகர்ந்து" என்கிற பெரிய திருமடற்சந்தை இங்கு விஷயவாக்ய மாதலால்.

12. சூ. 62.ல் "விசும்புந்துழாய் திருமாலேன்றும் எங்கே காண்கேனென்றும் இவரலமாப்பு" என்கிற பாடம் அஸங்கதம். "திருமாலென் றெங்கே காண்கே னென்னுமிவர்" என்பது திருத்தமான பாடம்.

13. சூ. 63-ல். "வேதாதிகளில் பௌருஷமான கீதா வைஷ்ணவங்கள் போலே" என்றவிடத்தில் "பௌருஷமாநவ கீதா......." என்பது திருத்தமான பாடம்.

14. 'ம்லேச்சனும் பக்தனானால்' இத்யாதி 85 ஆம் சூர்ணையில் "முடிமன்னனும்" என்பது 'முடிமன்னவனும்' என்று திருத்தத் தக்கது. "துளங்கு நீண் முடியரசர் தங்குரிசில் தொண்டை மன்னவன்" என்கிற பெரிய திருமொழிப் பாசுரம் இங்கு விஷய வாக்யமாதலால்.

15. சூ. 94-ல் "கழறலர்ஞான முருவின" என்பது சிறிதும் அர்த்தமில்லாத பாடம். திருவிருத்தத்தில் *கழறல மொன்றே நிலமுழுதாயிற்று* என்ற பாட்டில் 'கழறலம்' என்றும் 'அழறலர்' என்றும் வருவதால் அந்த வாஸனை கொண்டு இங்கு "கழறலர் ஞான முருவின" என்று பாடம் பண்ணிவிடுகிறார்கள். "கழலலர் ஞான முருவின" என்பது யுக்தமான பாடம். (உலகளந்த) கழலென்ன அலர்ஞானமென்ன [அதாவது தனது விகஸிதஜ்ஞானமென்ன] இவ்விரண்டும் மறுபாடுருவின பரப்பெங்கும் என்றபடி.

16. சூ. 102. "இடகிலேன் நோன்பறிகிலேன்" என்பது அந்வயிக்க முடியாத அபத்த பாடம். ".......நோன்பறிவிலேன்" என்பது திருத்தமான பாடம். "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்" என்கிற விஷய வாக்யத்தோடும் பொருந்தும்.

17. சூ. 112. *இவன் நடுவே அடியானித்யாதி-சூர்ணையில் த்ருப்திகரமான பாடம் தெளிவாகத் தெரியவில்லை. "இவன் நடுவே அடியானென்று....... வன்களவி லநுபவமாகிற" என்று சில ஸ்ரீகோசங்களிற் பாடம். "இவன் நடுவே அடியானென்ன,.... வன்களவி லநுபவமாக" என்று சில ஸ்ரீகோசங்களிற் பாடம். (அறுதியிடமாட்டாதவனாய் அலமருகின்றேன்.)

18. "வித்யை தாயாகப் பெற்று" இத்யாதியான 121 ஆம் சூர்ணையில் "நோக்கி யலங்கரித்து" என்கிற பாடம் சிறிதும் பொருள் படமாட்டாதது. இங்கு யுக்தமான பாடம் கிடைக்காமல் நெடுநாளளவும் வருந்திக் கிடந்தேன். தாதுஹு வானமாமலைக்கு விடைகொண்டிருந்தபோது அங்கு மடம் ஆஸ்தான வித்வான் உ. வே. வா. தி. ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமி யிடத்தில் ஓலை ஸ்ரீகோசமிருப்பதறிந்து வாங்கிப் பார்க்கையில் "நோக்கியர் அலங்கரித்து" என்கிற பாடம் கண்டு உள்ளம் பூரித்தேன். "மானேய் நோக்கியரான திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் எதிரே வந்து.... அலங்கரித்து" என்கிற வியாக்கியான ஸ்ரீஸூக்தியாலும் ஸம்வாதமாயிற்று இப்பாடம்.

19. சூ. 125. "விதிதன் புணையென்று"—'விதிதன் புணைவனென்று' என்பது திருத்தமான பாடம்.

20. அமுங்தொழு மித்யாதி 127 ஆம் சூர்ணையில் "ஊனுக வீரசரிதம் கற்பார்" என்கிற ஸ்தானத்தில் 'வீரசரித மூனுகக் கற்பார்' என்கிற பாடம் காண்கிறது.

21. "என் பெறுதியென்ன ப்ரமியாது" இத்யாதியான 152 ஆம் சூர்ணையில் "கடந்து புகுந்து தகைவறப்புக்கு" என்பது அநந்விதமான பாடம். "கடந்துபுகுந் தகைவறப்புக்கு" என்பதே திருத்தமான பாடம். கடந்துபுகும் தகைவு|அற— கடந்துபுக வேண்டுகையாகிற தகைவு இல்லாதபடி என்க.

22. சூ. 156. 'நம் பிழையும்' என்பது 'தம் பிழையும்' என்று திருத்தத் தக்கது.

23. சூ. 160. 'மண்ணோர் விண்ணோர் வெற்பில்'—இங்கு வெற்பில் என்பது வைப்பில் என்று திருத்தத்தக்கது. "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என்கிற பாசுரம் இங்கு விஷய வாக்யம். "தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே" என்கிற பாசுரத்திற்குச் சேர 'வெற்பில்' என்கிற பாடமும் இருக்கலாமென்று சிலர் கூறுவது இவ்விடத்து ப்ரமேயமின்னதென்று அறியாமையினுலாகும்.

24. சூ. 173, "ஸௌகுமார்ய ப்ரகாசம் அச் சேரியிலே'= ஆய்ச்சேரியிலே யென்பது சுத்தபாடம். "உடையநங்கையார் பிறந்தகமாகையாலே ஆழ்வார்க்கு ஆய்ச்சேரியாயிருப்பதாய்" என்கிற வியாக்கியான ஸ்ரீ ஸூக்தியோடுஞ் சேரும். [நம்மாழ்வாருடைய திருத்தாயாருக்கு உடைய நங்கையாரென்று திருநாமம்.]

25. சூ. 183. "முகநாபி பாதங்கள் த்வாரத்ரயத்தாலே"— முகநாபி பாதங்களை என்பது சுத்த பாடம்.

26. சூ. 198. "வைத்தெழவூதி"—ஊது என்று திருத்துக.

27. சூ. 202. "போகேலென்றுலும் உகப்பையும் தவிர்ந்து"—'போகேலென்றுலுகப்பையுந் தவிர்ந்து' என்பது சுத்த பாடம். 'உம்மை' இங்கு வேண்டா.

28. சூ. 209. "அடைக்கலம் சூடி பொய்யாதானும்"— 'சூடிய' என்று திருத்துக.

29. சூ. 211. "எம்மாவொழி நெடுவே யென்கிற"— 'எம்மாவொழிவில் நெடு........' என்று திருத்துக.

30. சூ. 218. "காலாஸக்திபலகதிக்கு"—'காலாஸத்தி....' என்று திருத்துக.

31. சூ. 219. "வளவேழ்வைப்பாமவன் அவையுள்"— இங்கு 'அவன்' என்பது அநந்விதம். 'வளவேழ்வைப்பாமவையுள்' என்பதே சுத்தபாடம்.

32. சூ. 220. "எம்மா வீட்டை உபாயாநுகுணமாக்கினவர்"—'உபயாநுகுண....' என்று திருத்துக. (இதிலேயே) "திண்ணணவுதென்று"—'திண்ணனணவுதென்று' என்பது சுத்தம்.

33. சூ. 222. "ஆடுங்கள்ளிறைச்சி" 'ஆடுக்கள்ளிறைச்சி' என்று திருத்துக.

34. சூ. 223. "தேவர் குழாங்களைக் கண்டு கூப்பிட்டு"— காப்பிட்டென்று திருத்துக.

35. சூ. 224. "திரிவிக்கிரமனுய்க் குறள் கோலப்பிரானுய்" =' திரிவிக்கிரமனுகக் குறள்....' என்பது சுத்தபாடம்.

36. சூ. 226. 'அவர்க்கே குடிகளாய் பரதந்த்ரஸ்வரூபத்தை'—'குடிகளாம்' என்று திருத்துக.

37. சூ. 227. "வைகல்வாழ் முதலான ஸித்தோபாயம்"— "வாழ்தலான" என்று திருத்துக.

38. சூ. 228. அறியச் சொன்ன ஸௌப்ரபாதத்தை"— 'ஸௌப்ரபாதத்தே' என்று திருத்துக. (அதிலேயே) "மாயையை மடிவித்து"—'மடித்து' என்று திருத்துக. (அதிலேயே) "ஸாக்ஷாத்கரித்த பரமப்ராப்திக்கு"—பரப்ராப்திக்கென்று திருத்துக. "ப்ரஹ்மவிதாப்நோதி பரம்" என்ற உபநிஷத்துக்குச் சேர. (அதிலேயே) "கூசம் செய்யாது செய்திப்பிழை"— 'செய்யாத' என்று திருத்துக.

.... .... .... ....

தெலுங்கிலும் தமிழிலுமுள்ள அச்சுப் பிரதிகளை வைத்துக் கொண்டு திருத்தம் காட்டுவதானுல் இன்னமும் அதிகமாகவே காட்ட நேரும். இப்போது அடியேன் வெளியிடுமிப்பதிப்பை அக்ஷரந்தோறும் உற்று நோக்கினுல் அந்த அபத்த பாடங்களெல்லாம் அறும். அடியேனுக்குங் கிடைக்காத சுத்த பாடங்கள் இன்னமும் இருக்கக்கூடும். அவற்றைப் பரமக்ருபையோடு தெரிவிப்பார் திறத்தில் பெருநன்றிபாராட்டி வெளியிடுவேன். இப்போது இதில் செய்திருக்கிற திருத்தங்களில் ஒன்றுகூட அடியேன் ஸ்வதந்திரமாகச் செய்ததன்று. ஏடுகளில் கண்டனவும் பெரியார்வாய்க் கேட்டனவுமாம். இந்தத் திருத்தங்கள் வேண்டாதவையென்று தோன்றிப் பழைய பதிப்புகளிற் பாடங்களையே ஆதரிக்கவேணுமென்பார்க்கு அடியேன் மறுமாற்ற மொன்றுமுரைக்ககில்லேன். "எங்ஙனே சொல்லினு மின்பம் பயக்குமே" என்ற ரீதியில் இந்த திவ்யக்ரந்தத்தை எவ்வண்ணமாகப் பாடங்கொண்டு அநுஸந்தித்தாலும் பரமபோக்யமே யாகும்.

இதற்கு மணவாள மாமுனிகள் இட்டருளின வியாக்கியானம் அமுதினுமாற்ற வினிது. அதனுடைய பரம போக்யதையை ஸர்வஜ்ஞர்களன்றே கொண்டாடவேண்டும். உலகில் வியாக்கியானங்களருளிச் செய்த ஆசிரியர்கள் பலருளரெனினும் அவர்களுடைய வியாக்கியானங்களிலே பலவகையான க்லேசங்களையநுபவியா நின்றோம். பல குறைகளையுங் காணா நின்றோம். அப்படி ஒருவிதமான குறையும் கூறுதற்கிடமின்றியே ஒருவகை

யான க்லேசத்தையுங் கொடாதே ஸ்வச்ச கங்காப்ரவாஹ மென்னவமைந்த வியாக்கியானம் மணவாள மாமுனிகளுடையதே யாம். ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் மிகத் தெளிவாகத் திருவுள்ளத்திலடக்கிக் கொண்டிருந்து தேனும் பாலுங் கன்னலுமமுதுமான ஸ்ரீஸூக்திகளைத் தொடுக்குந்திறன் மாமுனிகளொருவர்க்கே அஸாதாரணமாகும்.

அந்த வியாக்கியானம் காலக்ஷேப முறையிலேயே பலகால் அதிகரித்து அறிய வேண்டியதாயிருப்பதாலும் ஸம்ஸ்க்ருத வாக்ய பஹுளமாயிருப்பதாலும் ஸுகுமார மதிகளுக்கும் இந்த க்ரந்தத்தின் அர்த்த விசேஷங்களும் தாற்பரியமும் எளிதிலுணரலாம்படி செய்யவேணுமென்கிற விருப்பங் கொண்ட அடியேன் விரிவான ஒரு உரையும் ஸங்க்ரஹமானதொரு தாத்பர்ய ஸாரமும் எழுதினேன். விரிவுரை ஏற்கெனவே ஸ்ரீமுக வருஷத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டிருக்கிறது. அதற்கு மறுபதிப்பும் நடைபெற்று வருகின்றது. தாத்பர்ய ஸாரம் இப்போது வெளியிடப்படுகிறது.

எவ்வளவு எளிமைப்படுத்தி யெழுத நினைத்தாலும் விஷயங்கள் கனத்தவையாதலால் அவை எளிமைப்படுத்த வொண்ணாதவையாகவேயிருக்கின்றன. சிலவிடங்களில் எளியனவாகத் தோன்றும். சில விடங்களில் கஹனமாகவே தோன்றும். நல்லாசிரியர்களிடத்தில் நேரில் கேட்டே நன்குணர வேண்டிய விஷயங்களை நாம் எவ்வளவு எளியனவாக எழுதினாலும் பரிபூர்ண பலன் விளைவது அரிதே. பலகால் கேட்டே அறியவேண்டுமத்தனை. ஆனாலும், மிகுந்த ஆஸ்தையோடு ஊன்றிப் பார்க்குமவர்களுக்கு இத்தாத்பர்ய ஸாரம் பெரும்பாலும் பயன்படுமென்று கருதுகின்றோம்.

மிகவுயர்ந்த இந்த திவ்ய க்ரந்தத்தின் ஆழ் பொருளையும் அரிய பெரிய கருத்தையும் அடியேனும் நன்கறியாதவனாயிருக்க, பிறர்களுக்கறிவிக்கப் பெருமுயற்சி கொண்டது உண்மையில் தகுதியற்றதே. இது ஸ்வரூப ப்ராப்தமான நைச்யாநுஸந்தானப் பேச்சன்று; உண்மையுரை. ஆயினும் இந்த திவ்ய க்ரந்தத்தில் அடியேனுக்குண்டான வ்யாமோஹம் அளவிறந்ததாதலால் அது படுத்துகிற பாடிது.

இங்ஙனம் :
ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம்
**அண்ணங்கராசார்ய தாஸன்.**
10—5—46



ஸ்ரீ

ஆழ்வார் திருவடிகளே சரணம்.
எம்பெருமானார் திருவடிகளே சரணம்.
ஜீயர் திருவடிகளே சரணம்.

**தனியன்கள்**

ஸ்ரீ சைலேச தயாபாத்ரமித்யாதி—ப்ரணதோஸ்மி நித்யம்.

ஆசார்யஸ்வாந்தவக்தாரம் அபிராமவராபிதம் .
ஸ்ரீக்ருஷ்ணதநயம் வந்தே ஜகத்குருவராநுஜம்.
த்ராவிடாம்நாயஹ்ருதயம் குருபர்வக்ரமாகதம்
ரம்யஜாமாத்ருதேவேந தர்சிதம் க்ருஷ்ணஸூநுநா.

பணவாளரவணைப் பள்ளியயில்பவர்க் கெவ்வுயிரும்
குணபோகமென்று குருகைக்கதிபனுரைத்ததுய்ய
உணர்பாவினுட்பொருளொன்று மறியாவுலகறிய
மணவாளன் மாறன்மனமுரைத்தான் வண்திமுடும்பைவந்தே.
மாதவத்தோன் மாறன்மனம் கூறும் மணவாளன்
தோதவத்தித் தூய்மறையோரான பெற்றார்—நீதியினால்
ஆங்கவர்தாள்சேர்பெற்றாராயிமணவாளமுனி
பூங்கமலத்தாள்கள் நெஞ்சே போற்று.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்
திருவடிகளே சரணம்

---

ஸ்ரீரஸ்து

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்
அருளிச்செய்த

# ஆசார்ய ஹ்ருதயம்.

(முதல் ப்ரகரணம்.)

௧. காருணிகனான ஸர்வேச்வரன் அறிவிலாமனிசர் உணர்வென்னும் சுடர்விளக்கேற்றிப் பிறங்கிருள் நீங்கி மேலிருந்த நந்தாவேத விளக்கைக்கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின ப்ரதீபமான கலைகளை நீர்மையினாலருள் செய்தான்.

௨. விவேகபலம் வீடுபற்று.

௩. த்யாஜ்யோபாதேயங்கள் ஸுகதுக்கங்கள்.

௪. இவற்றுக்கெல்லை இன்புதுன்பளி பன்மாமாயத்தழுந்துகையும், களிப்பும் கவர்வுமற்றுப் பேரின்பத்தின்புறுகையும்.

௫. அநந்தக்லேச நிரதிசயாநந்த ஹேது—மறந்தேன் அறியகிலாதே உணர்விலேன் ஏணிலேன் அயர்த்தென்றும், உய்யும்வகை நின்றவொன்றை நன்கறிந்தனன் உணர்வினுள்ளே ஆம்பரிசென்றும் சொல்லுகிற ஜ்ஞாதவ்யபஞ்சகஜ்ஞாநாஜ்ஞாநங்கள்.

௬. இவற்றுக்குக் காரணம் இரண்டிலொன்றினில் ஒன்றுகைகள்.

௭. ஸத்வாஸத்வநிதாநம் இருள்தரும் அமலங்களாகவென்னும் ஜன்மஜாயமாநகாலகடாக்ஷங்கள்.

௮. இவற்றுக்கு மூலம் இருவல்லருள் நல்வினைகள்.

௯. கர்மக்ருபாபீஜம் பொய்ந்நின்ற அருள்புரிந்த வென்கிற அவித்யாஸௌஹார்தங்கள்.

௧௦. ஏதந்நிமித்தம் முன்னமே முதல்முன்னமேயான அசிதயநாநாதிஸம்பந்தங்கள்.

௧௧. இவை கிட்டமும் வேட்டுவேளானும் போலே ஒண்பொருள் பொருளல்லாதவை யென்னாதே நானிலாத யானுமுளனவ னென்கிற ஸாம்யம்பெறத் தின்றூதி அந்தமும் வாழ்வுமாகிற ஹாநிஸத்தைகளை யுண்டாக்கும்.

௧௨. ஒன்று கூடினதாய் பற்றறுக்க மீண்டொழிகையாலே பழவடியே னென்னுமதொன்றுமே ஒழிக்க வொழியாதது.

௧௩. இந்த வுதிரத்தரிப்பு த்ரைகுண்ய விஷயமானவற்றுக்கு ப்ரகாசகம்.

௧௪. வத்ஸலையானமாதா பிள்ளை பேகணியாமல் மண்தின்ன விட்டு ப்ரத்யௌஷதமிடுமாபோலே எவ்வுயிர்க்கும் தாயிருக்கும் வண்ணமானவிவனும் ருசிக்கீடாகப் பந்தமும் பந்த மறுப்பதோர் மருந்தும் காட்டுமிறே.

௧௫. அதுதானும் ஆஸ்திக்யவிவேக அந்ய சேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி பாரதந்த்ர்யங்களை யுண்டாக்கினவழி.

௧௬. சதுர்விதமான தேஹவர்ணாச்ரமாதிகார பல மோக்ஷஸாதந கதி யுகதர்மவ்யூஹ ரூபக்ரியாதிகளை அறிவிக்கிற பாட்டுப் பரப்புக்கு—பெரிய தீவினில் ஒன்பதாம் கூறும் மானிடப் பிறவியும் ஆக்கை நிலையும் ஈரிரண்டிலொன்றும் இளமையுமிசைவு முண்டாய் புகுவரேலு மென்கிறதுக்குள்ளே விக்நமற நின்றவா நில்லாப் ப்ரமாதியைக் கொண்டு அறக்கற்கை அரிதென்றிறே வேதஸாரோபநிஷத் ஸாரதரா நுவாக ஸாரதம காயத்ரியில் முதலோதுகிற பொருள்முடிவான சுருக்கைத் தெய்வவண்டாய் அன்னமாய் அமுதம் கொண்டவன் சாகைகளிலும் ஓதம்போல்கிளர் நால் வேதக் கடலிலும் தேனும் பாலு மமுதுமாக வெடுத்துப் பெருவிசும்பருளும் பேரருளாலே சிங்காமை விரித்தது.

௧௭. முனிவரை யிடுக்கியும் முந்நீர் வண்ணனையும் வெளியிட்ட சாஸ்த்ர தாத்பர்யங்களுக்கு விசிஷ்ட நிஷ்க்ருஷ்ட வேஷங்கள் விஷயம்.

௧௮. தோல்புரையே போமதுக்குப் பழுதிலா யோக்யதை வேணும்; மனமுடையீரென்கிறசீரத்தையே அமைந்த மர்மஸ்பர்சிக்கு நானும் நமருமென்னும்படி ஸர்வருமதிகாரிகள்.

௧௯. சாஸ்த்ரிகள் தெப்பக்கையரைப்போலே இரண்டையுமிடுக்கிப் பிறவிக்கடலை நீந்த ஸாரஜ்ஞர் விட்டத்திலிருப்பாரைப் போலே இருகையும் விட்டுக் கரைகுறுகும் காலமெண்ணுவர்கள்.

௨0. இவை ஸ்வரூபத்தை உணர்ந்துணர்ந் துணரவும் உணர்வைப் பெறவூர மிகவுணரவுமுண்டாம்.

௨௧. சேஷத்வ போக்த்ருத்வங்கள் போலன்றே பாரதந்த்ர்ய போக்யதைகள்.

௨௨. ஜ்ஞாந சதுர்த்திகளின் மேலேயிறே ஆநந்த ஷஷ்டிகளுக்கு உதயம்.

௨௩. மூலைத்தெழுந்த ஸூர்யதுல்யதாதம்யசரமம் விதியில் காணும் ப்ரதமமத்யமதசைகளைப் பகல்விளக்கும் மின்மினியுமாக்கும்.

௨௪. நாலில் ஒன்று ப்ரவர்த்தகம், ஒன்று நிவர்த்தகம்.

௨௫. முற்பாடர்க்கு க்ரியாங்கமானவை யிரண்டும் செயல் தீர்ந்தார் வ்ருத்தியில் ஸ்வநிர்பந்தமறுக்கும்.

௨௬. கர்மகைங்கர்யங்கள் ஸத்யாஸத்ய நித்யாநித்ய வர்ண தாஸ்யாநுகுணங்கள்.

௨௭. இவற்றுக்கு விதிராகங்கள் ப்ரேரகங்கள்.

௨௮. மண்டினாரும் மற்றையாருமாச்ரயம்.

௨௯. அருள் முடிய நிறுத்தி அடைய நின்றதும் நல்லதோரருள் தன்னாலே நன்று மெளியனாகிறதும் விஷயம்.

௩௰. இவற்றாலே ஸாதாரண மஸாதாரண மென்னும்.

௩௧. ஜாத்யாச்ரமதீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள்போலே அத்தாணிச் சேவகத்தில் பொதுவானது நழுவும்.

௩௨. ஸாதநஸாத்யங்களில் முதலும் முடிவும் வர்ணதர்மிகள் தாஸவ்ருத்திகளென்று துறைவேறிடுவித்தது.

௩௩. வேதவித்துக்களும் மிக்கவேதியரும் சந்தஸாம் மாதாவாலும் அதுக்கும் தாயாய் தாயினுமாயின செய்யுமத்தாலும் பிறப்பிக்குமது இருவர்க்கும் ச்ரேஷ்டஜந்மம்.

௩௪. அந்தணர் மறையோரென்றும் அடியார் தொண்டரென்றும் இவர்களுக்கு நிரூபகம்.

௩௫. ஒருதலையில் க்ராமகுலாதிவ்யபதேசம் குலந்தருமென்னும் மாசில்குடிப் பழியென்று பதியாகக் கோயிலில் வாழுமென்பர்கள்.

௩௬. விப்ரர்க்கு கோத்ர சரண ஸூத்ர கூடஸ்தர் பராசர பாராசர்ய போதாயநாதிகள்; ப்ரபந்ந ஜநகூடஸ்தர் பராங்குசபரகாலயதிவராதிகள்.

௩௭. அத்யயநஜ்ஞாநாநுஷ்டாநங்களாலே ப்ராஹ்மண்யமாகிறாப் போலே சந்தங்களாயிரமுமறியக் கற்று வல்லாரானால் வைஷ்ணவத்வ ஸித்தி.

௩௮. இந்த உட்பொருள் கற்றுணர்ந்து மேலைத்தலை மறையோராகாதாரை அயல்சதுப்பேதிமாரென்று உத்பத்தி நிரூபிக்கும்.

௩௯. எவ்வுலகத் தெவ்வெவையும் என்கையாலே வேதம் பஹுவிதம்.

௪0. அதில், ஸம்ஸ்க்ருதம் த்ராவிடமென்கிற பிரிவு ருகாதி பேதம் போலே.

௪௧. செந்திறத்ததமிழென்கையாலே ஆகஸ்த்யமுமநாதி.

௪௨. வடமொழி மறையென்றது தென்மொழி மறையை நினைத்திறே.

௪௩. வேதசதுஷ்டயாங்கோபாங்கங்கள் பதினாலும்போலே இந்நாலுக்கும் இருந்தமிழ்நூல் புலவர் பனுவலாறும், மற்றையெண்மர்நன்மாலைகளும்.

௪௪. ஸகலவித்யாதிகவேதம்போலே இதுவும் திவ்யப்ரபந்தப்ரதாநம்.

௪௫. வேதநூல் இருந்தமிழ்நூல் ஆஜ்ஞை ஆணை வசையிலே தமில் சுருதி செவிக்கினிய ஓதுகின்றதுண்மை பொய்யில்பாடல் பண்டை நிற்கும் முந்தையழிவில்லா வென்னும் லக்ஷணங்களொக்கும்.

௪௬. சொல்லப்பட்ட வென்றவிதில் கர்த்ருத்வம் ஸ்ம்ருதி அத்தை ஸ்வயம்பூ படைத்தானென்றது போலே.

௪௭. நால்வேதம்கண்ட புராணரிஷி மந்த்ரதர்சிகளைப் போலே இவரையும் ரிஷிமுனி கவியென்னும்.

௪௮. படைத்தான்கவி யென்றபோதே இதுவும் யதாபூர்வ கல்பநமாமே.

௪௯. உறக்கம் தலைக்கொண்டபின்னை மறைநான்குமுணர்ந்த தங்களப்பனோடே ஓதின சந்தச்சதுமுகன் சலங்கலந்த வெண்புரிநூல் மாணுரி திரிதந்துண்ணும் காமனுடல் இருக்கிலங்கு ஜ்யேஷ்டபுத்ராதிகளுக்கு மறைபயந்தாப்போலே ஆதுமில் காலத் தெந்தையான வாய்முதலப்பன் பிரமகுருவாய் இராப்பகல் முன் சொல்ல, கற்றனமே யென்றவிவரும் நாவினால் நன்மையாலென்று ஓதவல்ல பிராக்களைக் கன்மின்களென்று சொல் பயிற்ற, வேதம் ஓதுவாரோத்தாகையாலே ஆதர்வணாதிகள் போலே இதுவும் பேர் பெற்றது.

௫0. இயற்பா மூன்றும் வேதத்ரயம் போலே. பண்ணார் பாடல் பண்புரையிசைகொள் வேதம் போலே.

௫௧. ருக்கு ஸாமத்தாலே ஸரஸமாய் ஸ்தோபத்தாலே பரம்புமாபோலே சொல்லார்தொடையல் இசைகூட்ட அமர்சுவையாயிரமாயிற்று.

௫௨. சந்தோகனென்று ஸாமாந்யமாகாமல் முதலிலே பிரித்து யாழ்பயில் ஞானஸ்வரூபியைப் பாலையாகியென்று விசேஷிக்கையாலே வேதகீதச்சாமி நானென்றஸாமம் தோன்ற உத்கீதப்ரணவத்தை ப்ரதமத்திலே மாறாடி சரமகதி முடிவாகத் தொண்டர்க்கமுதென்ன தேவாந்நமாக்கி மஹாகோஷ நல்வேத வொலிபோலே மஹாத்யயநமென்னப் பாடுகையாலே இத்தை சாந்தோக்ய ஸமமென்பர்கள்.

௫௩. புரவியேழொருகாலுடைய தேரிலே திருச்சக்கரமொத்துக் காலசக்கரச் செங்கோல் நடாவி ஜ்யோதிச்சக்ர வொளி சுருக்கி அக்நீஷோமீய தேஜோம்ருதத்துக்கு ஊற்றும், மந்தேஹர்க்குச் செந்தீயும் முக்திமார்க்கத் தலைவாசலும் கண்ணாவான் கண்ணில் பிறந்த கண்மணியும் த்ரயீமயமுமான மண்டலத்திலே தண்டாமரை சுமக்கத் தோள்வளையும் குழையும் திருச்செய்யமுடியும் ஆரமும் படையும் திகழும் பொன்மேனியும் செஞ்சுடர்த் தாமரைக் கண்ணுமாய் அணிநிறமூர்த்தி ஈதென்னும்படி இரண்டையும் தன்னிறமாக்குகிற செய்யாளான வித்யையோடே அருக்கன் மேவின ஸதாத்யேய தேஜஸ்ஸின் ஸாமாஸோத்கார நாமமுள்ளுறையான ஆத்யந்தங்களாலே ஓராயிரமாமவற்றிலே ஒன்றை ஆயிரமுகத்தினாலருளின தீர்த்தம் போலே தீர்த்தங்களாயிரமுமாக விஸ்தரிக்கிறாரென்று வேதகுருபதேசம்.

௫௪. அன்றிக்கே ஸ்வரூபகுண விபூதிசேஷ்டிதங்களை விசதமாக்குகிற பஞ்சராத்ர புராணேதிஹாஸங்கள் போலே நீலபாரூபோக்தி தெரியச்சொன்ன வேதோபப்ரும்ஹணமென்பர்கள்.

௫௫. கல்பாதியில் தோற்றிற்று வர்ணிக்கும் சதுர்முகன் சந்தஸ்ஸாம் மோஹசாஸ்த்ரப்ரவர்த்தகன் பிணச்சுடலை வெந்தாரக்குமாறு மணிந்து ஏறேறிச் சுழன்றாடுமாலமமர் பிச்சுத் தெளிந்து தான்வணங்குமாறுரைக்கக் கேட்ட ஸஜாதீயர் ப்ரஸாதமும் ஆர்ஷமூலம்.

௫௬. பரமஸத்வத்தோடே உள்ளியுரைக்கும் நிறைஞானத்தயனும் சிவனும் திருமாலருள் கொண்டு இவர்பாடினார்.

௫௭. கருவுள் வேறலாமை அரனயனெனச் செய்யுமவை போலே மூவுருவா முதல்வன் துப்பரவாலே பரம கவிகளால் பாடுவியாது நேர்படச் சொல்லும் நீர்மையிலாவென்னைத் தன்னாக்கி என்னை முதல் வந்து புகுந்து தப்புதலறத் தன்னை வைகுந்தனாகத் தன் சொல்லால் தானே துதித்து மலக்கு நாவியல் மொய்ய சொல்லால் சொல்லவல்லேனென்று நானும் சொல்லி நாடும் கையெடுக்கும்படி என் சொல்லால் யான் சொன்ன இன்கவி யென்பித்தானென்றாரிறே.

ருஅ. தர்மவீர்யஜ்ஞானத்தாலே தெளிந்து ஹ்ருஷ்டராய் மேலே மேலே தொடுப்பாரைப் போலன்றே அருளின பக்தியாலே உள்கலங்கிச் சோகித்து மூவாறுமாஸம் மோஹித்து வருந்தியேங்கித் தாழ்ந்த சொற்களாலே நூற்கிறவிவர்.

ருசு. ஸ்வாத்யாய யோகங்களைக் கற்றும் தெளிந்தும் கண்டமைமைப்பாலே ஓதியுணர்ந்தவர் இன்று மாசாபாசபத்தர்; அவன் வழங்கும் திவ்ய சக்ஷுஸ்ஸாலே நேரே கார்செறிந்த நீருடி கட்கரிய அரும் பொருளைக் கண்டபோதே யாமுருமையென்னும்படி இவர்க்கு வன்பாசங்கள் நீங்கிற்று.

சுய. அவர்களுக்குக் காயோடென்னுமிவையே தாரகாதிகள்; இவர்க்கு எல்லாம் கண்ணனிறே.

சுக. அழுநீர்துளும்பக் கடலும் மலையும் விசும்பும் துழாய் திருமாலென்று எங்கே காண்கேனென்னுமிவரலமாப்பு அவர்களுக்குப் புத்ரவியோகத்திலே.

சுஉ. பலஸாதநதேவதாந்தரங்களில் இவர்கள் நினைவு பேச்சிலே தோன்றும்.

சுரு. ராமாயணம் நாராயணகதை யென்று தொடங்கி கங்காகாங்கேயஸம்பவாத்யஸத்கீர்த்தநம்பண்ணின எச்சில்வாய் சுத்திபண்ணமல் திருமாலவன்கவியென்ற வாயோலைப் படியே மாற்றங்களாய்ந்துகொண்டு உரியசொல்வாய்த்தவிது வேதாதிகளில் பௌருஷ மாநவ கீதா வைஷ்ணவங்கள் போலே அருளிச்செயலில் ஸாரம்.

சுச. குருசிஷ்யக்ரந்த விரோதங்களைப் பரமதாதிகளாலே பரிஹரியாமல் செஞ்சொல் செந்தமிழ் இன்கவி பரவியழைக்குமென்று அந்யோந்யம் கொண்டாடிப் பேசிற்றே பேசுமேககண்டரில் எனனில் மிகுவென்னு மிவருரைகொளின்மொழிகொண்டு சாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயிக்க வேண்டுகையாலே வலங்கொண்ட விதுக்குச் சேராதவை மநு விபரீதங்கள் போலே.

சுரு. பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ர வாக்யங்கள் ஒருங்கவிடுவர்.

சுசு. அதுக்கு மூலம்—"விதயச்ச" என்கிற பரமாசார்ய வசநம்.

சுஎ. ஆப்திக்குஇவர் சுருதி மார்க்கண்டேயன் பார்த்தனென்கிறவிவை வ்யாஸ மநு ப்ரஹ்மவாதிகளை வேதம் சொல்லுமாபோலே.

௬அ. பாரதகீதைகளில் வேதோபநிஷத்த்வம் போலே இது வும் வ்யாக்யையாலும் வேதரஹஸ்யமாம்.

௬௯. உதாத்தாதிபதக்ரம ஜடாவாக்ய பஞ்சாதி பாத வருத்த ப்ரச்ந காண்டாஷ்டகாத்யாயாம்சபர்வாத்யலங்காரங்கள்போலே எழுத்தசை சீர்ப்பந்தமடி தொடை நிரைநிரையோசை தளையினம் யாப்புப் பாத்துறை பண் இசை தாளம் பத்து நூறாயிரம் முதலான செய்கோலம் இதுக்குமுண்டு.

௭0. அதவா வேதவேத்யந்யாயத்தாலே பரத்வபரமுது வேதம் வ்யூஹவ்யாப்த்யவதாரணங்களில் ஓதின நீதி கேட்ட மநு படுகதைகளாய் ஆகமூர்த்தியில் பண்ணிய தமிழானவாறே வேதத்தை த்ராவிடமாகச் செய்தாரென்னும்.

௭௧. மண்ணாடினஸஹ்யஜலம் தோதவத்திச் சங்கணி துறையிலே துகில்வண்ணத் தெண்ணீராய் அந்தஸ்ஸத்தைக் காட்டுமா போலே அல்பச்ருதர் கலக்கின ச்ருதி நன்ஞானத்துறை சேர்ந்து தெளிவுற்று ஆழ்பொருளை யறிவித்தது.

௭௨. மேகம் பருகின ஸமுத்ராம்புபோலே நூற்கடல் சொல் இவர்வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோப ஜீவ்யமாமே.

௭௩. ம்ருத்கடம் போலன்றே பொற்குடம்.

௭௪. பெரும்புறக் கடலும் ச்ருதிஸாகரமும் அலைத்து ஆழ்ந்து ஓடுமிடங்களில் அயோக்யர்க்குச் சமைத்த மடுவும் சாய்கரகமும் மாநமேயசரமம்.

௭௫. வீட்டின்ப வின்பப்பாக்களில் த்ரவ்ய பாஷா நிரூபண ஸமம் இன்பமாரியி லாராய்ச்சி.

௭௬. பேச்சுப் பார்க்கில் கள்ளப் பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்; பிறவி பார்க்கில் அஞ்சா மோத்தும் அறு மூன்றும் கழிப்பனும்.

௭௭. க்ருஷ்ணக்ருஷ்ணத்வைபாயநோத்பத்திகள் போலன்றே க்ருஷ்ணத்ருஷ்ணாதத்த்வ ஜந்மம்.

௭அ. பெற்றும் பேறிழந்தும் கன்னிகையானவளும் எல்லாம் பெற்றாளாயும் தத்துக் கொண்டாள் என்பர்கின்றுரென்னு மவளும் நெடுங்காலமும் நங்கைமீரென்னு மிவருக்கு நேரன்றே.

௭௯. மீநகவநீதங்கள் கந்திக்குமிடமும் வெறிகொள் துழாய் கமழுமிடமும் தன்னிலொக்குமோ ?

அ௰. ஆற்றில் துறையில் ஊரிலுள்ள வைஷம்யம் வாசாம கோசரம்.

அக. தேவத்வமும் நிந்தையானவனுக்கு ஒளிவரும் ஜந்மம் போலே ப்ரஹ்மஜந்மமும் இழுக்கென்பார்க்குப் பண்டை நாளில் பிறவி உண்டாக்கும் தேசிறே.

அஉ. ஜநக தசரத வஸுதேவ குலங்களுக்கு மூத்த பெண்ணும் நடுவில் பிள்ளையும் கடைக் குட்டியும் போலே இவரும் பிறந்து புகழுமாக்கமு மாக்கி அஞ்சிறையு மறுத்தார்.

அ௩. ஆதித்ய ராமதிவாகராச்யுதபாநுக்களுக்குப் போகாத உள்ளிருள்நீங்கி சோஷியாத பிறவிக்கடல் வற்றி விகஸியாத போதில்கமலமலர்ந்தது வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே.

அச. வம்ச பூமிகளை யுத்தரிக்கக் கீழ்க் குலம் புக்க வராஹ கோபாலரைப் போலே இவரும் நிமக்நரை யுயர்த்தத் தாழ விழிந்தார்.

அரு. ம்லேச்சனும் பக்தனுனால் சதுர்வேதிகளநுவர்த்திக்க அறிவு கொடுத்துக் குலதைவத்தோடொக்கப் பூஜை கொண்டு பாவநதீர்த்தப்ரஸாதனுமென்கிற திருமுகப் படியும், விச்வாமித்ர விஷ்ணுசித்த துலஸீப்ருத்யரோடே உள்கலந்து தொழுகுல மானவன் நிலையார் பாடலாலே ப்ராஹ்மண வேள்விக் குறை முடித்தமையும், கீழ்மகன் தலைமகனுக்கு ஸமஸகாவாய் தம்பிக்கு முன்பிறந்து வேலும் வில்லும் கொண்டு பின் பிறந்தாரைச் சோதித்துத் தமையனுக்கு இளையோன் ஸத்பாவம் சொல்லும்படி ஏகருல மானமையும், தூது மொழிந்து நடந்து வந்தவர்களுடைய ஸம்யக் ஸகுண ஸஹபோஜநமும், ஒரு பிறவியிலே இரு பிறவியானுரிருவர்க்கு தர்மஸூநு ஸ்வாமிகள் அக்ரபூஜை கொடுத்தமையும், ஐவரில் நால்வரில் மூவரில் முற்பட்டவர்கள் ஸந்தேஹியாமல் ஸஹஜரோடே புரோடாசமாகச் செய்த புத்ர க்ருத்யமும், புஷ்பத்யாக போக மண்டபங்களில் பணிப் பூவுமால வட்டமும் வீணையும் கையுமான அந்தரங்கரை முடிமன்னவனும் வைதிகோத்தமரும் மஹாமுனியும் அநுவர்த்தித்தக்ரமமும் யாகாநுயாகோத்தர வீதிகளில் காயாந்நஸ்தல சுத்திபண்ணின வ்ருத்தாசாரமும் அறிவார்க்கிறே ஜந்மோத்கர் ஷாபகர்ஷங்கள் தெரிவது.

அசு. அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ணாச்ரமவித்யாவ்ருத்தங்களை கர்தபஜன்மம் ச்வபசாதமம் சில்பநைபுணம் பஸ்மாஹுதிசவவிதவாலங்காரமென்று கழிப்பர்கள்.

# இரண்டாம் ப்ரகரணம்

அஎ. அணையவூரப்புனைய அடியும் பொடியும்படப் பர்வத பவநங்களிலே ஏதேனுமாக ஜநிக்கப் பெறுகிற திர்யக்ஸ்தாவர ஜந்மங்களைப் பெருமக்களும் பெரியோரும் பரிக்ரஹித்து ப்ரார்த்திப்பர்கள்.

அஅ. சேஷத்வ பஹிர்பூத ஜ்ஞாநாநந்தமயனையும் ஸஹியாதார் த்யாஜ்யோபாதியை ஆதரியார்களே.

அகூ. இதின் ஔபாதிகத்வம் ஒரு ராஜா தன்னை மறைமுனி வணக்கினவன் நீசனுக்குவித்த ராஜாவை வாரே உறுப்பாக யஜிப்பித்து ஸ்வர்க்கமேற்றினபோதே தெரியும்.

கூ௰. மாவுருவில் கள்ளவேடம், திருந்து வேதமலமான மானிடம் பாடல், ஸர்வவர்ண சூத்ரத்வம், காடுவாழ் சாதியில் கடல்வண்ணன் வேடம், தென்னுரையில் ஹரிகீர்த்தி. ச்வபசரில் பத்திபாசனமுமறிவார் ஆராரமரரென்ன வேற, அறியாதார் சாதியந்தணர்களேலும் தகரவிழுவர்.

கூக. தமிழ்மாமுனி திக்கு சரண்யமென்றவர்களாலே க்வசித்க்வசித்தென்று இவராவிர்ப்பாவம் கலியும் கெடும்போலே ஸூசிதம்.

கூஉ. அத்ரி ஜமதக்நி பங்க்திரத வஸுநந்த ஸூநுவானவனுடைய யுகவர்ண க்ரமாவதாரமோ? வ்யாஸாதிவதாவேசமோ? மூதுவர் கரைகண்டோர் சீரியரிலே ஒருவரோ? முன்னம் நோற்ற அனந்தன்மேல் புண்ணியங்கள் பலித்தவரோவென்று சங்கிப்பர்கள்.

கூங. அதுக்குமூலம்—யான் நீ என்று மறுதலைத்து வானத்து மண்மிசை மாறும் நிகருமின்றி நிலையிடம் தெரியாதே தெய்வத்தின மொருவகைக்கொப்பாக இனத்தலைவன் அந்தாமத்தன்பு செய்யச் சேர்ந்தமைக் கடையாளமுளவாக உகந்துகந்து திமிர் கொண்டாலொத்து நாட்டியல்வொழிந்து சடரையோட்டி மதாவலிப்தர்க்கு அங்குசமிட்டு நடாவிய கூற்றமாய்த் தீயன மருங்குவாராமல் கலியுகம் நீங்கிக் கிதயுகம் பற்றிப் பட்டெழு போதறியாதிருந்தப்ரபாவம்.

கூச. அதுக்குஹேது—ஊழிதோறும் சோம்பாது ஒன்றிப் பொருளொன்றளிமகிழ்ந்து முற்றுமாய்நின்று நூலுரைத்து

யோகுபுணர்ந்து கண்காணவந்து ஆள்பார்க்கிறவன் உலகினதியல்வை நல்வீடுசெய்ய இணைக்குப் பார்வைதேடிக் கழலலர் ஞானமூருவின முழுதுமோட்டின பெருங்கண் எங்குமிலக்கற்று அன்பொடு நோக்கான திசையிலே ஆக்கையில் புக்குழன்று மாறிப்படிந்து துளங்குகிறவர் மேலேபடப் பக்கநோக்கறப் பண்ணின விசேஷகடாக்ஷம்.

௯௫. ச்ரமணீ விதுர ரிஷிபத்நிகளைப் பூதராக்கின புண்டரீகாக்ஷன்நெடுநோக்கு சாபமிழிந்தென்னப் பண்ணுமிறே.

௯௬. கோவ்ருத்திக்கு நெரிஞ்சியைப் புல்லாக்கினவன் ஜகத்திதார்த்தமாக எனக்கே நல்லவருள்களென்னும்படி ஸர்வ ஸௌஹார்த ப்ரஸாதத்தை ஒருமடை செய்து இவரைத் தன்னுக்கலோகமாகத் தம்மைப்போல ஆக்கும்படியானார்.

௯௭. அதாவது மயர்வறமதிநலமருளுகை.

௯௮. இருள் துயக்கு மயக்கு மறப்பென்கிற அநுதய ஸம்சய விபர்யய விஸ்ம்ருதிகளற்று மலர்மிசை யெழுகிற ஞானத்தைக் காதலன்பு வேட்கை அவாவென்னும் ஸங்க் காமாநுராகஸ்நேஹா த்யவஸ்தா நாமங்களோடே பரமபக்திதசை யாக்குகை.

௯௯. ஜந்மாந்தர ஸஹஸ்ர நல் தவங்களாலே ந்யாதகுலங்களிலே பிறந்து எழுதி வாசித்து தத்வஜ்ஞராய்க் குளித்து ஓதி உருவெண்ணு மந்தி ஐவேள்வி அறுதொழில்களால் மிக்கு ஊண்வாடப் பொருப்பிடைத் தாம் வருந்தித் துன்ப வினைகளை விடுத்து விவேக சமாதிகள் வளர எட்டுநீக்கி எட்டுமிட்டு எட்டினைய பேதப் பூவில் சாந்தொடு தேவகாரியம் செய்து உள்ளம் தூயராய் வாரிப் புன்புலவகத்தினுள் இளைப்பினையடைவே விளக்கினைக்கண்டு யோகநீதி நண்ணி அறம் திகழுமறையோர் மனந்தன்னுள் அமர்ந்துறையும் அரும்பெரும் சுடரைக் கண்கள் சிவந்திற்படியே மனவுட்கொண்டு நிரந்தரம் மறவாமை தொடக்க த்ருவஸ்ம்ருதியாய் கனவில் மிக்க தர்சநஸமமாய் ஆகத்துப் புல்கு மத்யர்த்தப்ரியமாய் வைகும் சிறப்புவிட்டுக் குற்றேவலென்னுதை அநந்ய ப்ரயோஜநமாய் வேதநோபாஸந ஸேவாத்யாநாதிகளென்றுசொல்லுமது ஸாத்யஸாதநபக்தியாக சாஸ்த்ர ஸித்தம்.

௧௦௦. ஸ்வீக்ருத ஸித்த ஸாதநர் இத்தை ஸாத்யமாக இரக்க ப்ராப்திக்கு முன்னே ஸித்திக்கும்.

௧௦௧. இது உபயமுமன்றிக்கே அறியாக்காலத்தே ஒக்கப் பிறந்து தழுவிநின்று கட்டமே நோயாயுலர்த்தி வீழ்ந்தலப்பாய்

த்யாகஸ்வீகார நிஷ்டாஹாநிகளாக்கி ஸத்தாபோக வ்ருத்தி யுபகரணமாவதொன்று.

கOஉ. இடகிலேன் நோன்பறிவிலேன் கிற்பன் கீழ்நாள்க ளென்கையாலே ஸாதநத்ரய பூர்வாப்யாஸஜமல்ல.

கOரு. இப்பிறப்பே சிலநாளிலென்றபோதே இரண்டும் கழியும்.

கOச. பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெரும் செய், கலியாரே வ ஆளும் வன்குறும்பர் குடியேறிப் பெருங்குடியும் தங்கள் கருத் துள்ளேயாக்கிப் படிந்துண்ணும் போகத்தே தூராதே பொறுக் கொணுப் போகத்துக்குக் காவல் செய்து குமைத்துத் திரித்து வீழ்த்தி வலித்தெற்றி அருவியறுத்துக் கடனுயின இறுப்பிக்கப் பாழ்த்த விதியானவாறே தன்பால் மனம் வைப்பிப்பதாகத் தேய்ந்தறமன்னி ஒள்வாளுருவி வினைத்தூற்றை வேரறுவித்துத் தீக்கொளீஇக் கவ்வையெருவிட்டு அமுதவாறுதலைப்பற்றி வரியாய்க் கசிந்ததிலே ஈரநெல்வித்தி எழுநாற்றுக்களையையும் வேர் முதல் மாய்த்துப் பட்டிச்சேவதக்கி மீது கொள்ளாமல் குறிக்கொள்வித்துக் கடல்புரைய விளைந்து தலைவணக்கினவாறே நாளுநாள் கோட்குறையாக நின்றூரறியாமல் குந்தம்கொண்டு ஆராமையுண்டு காலக்கழிவாலே நிலத்துகாமல் பற்றறுத்துத் தண்டாலடித்துப் பதராறுத்துப் போர்த்ததோல் விடுத்து ஸூக்ஷ்ம வொட்டும் நீரிலே கழுவி வேரோர் கலத்திட்டுப் பைந்தொடி மடந்தையரைக் கொண்டு ஷட்குண ரஸாந்நமாக்கி வானோர்க்கு ஆராவமுதானவாறே மூற்று மூன்ன முன்னம் பாரித்து உழுவ தோர் நாஞ்சில் கொண்டு பெருகமுயலும் பத்தியுழவன் க்ருஷி பலமிறே.

கOரு. கோஸல கோகுல சராசரம் செய்யும்குணமொன் றின்றியே அற்புத மென்னக் கண்டோம்.

கOகூ. பட்டத்துக்குரிய வாளையு மரசும் செய்யுமவை ஆராயாது.

கOஎ. முந்நீர் வாழ்ந்தார் சூட்டும் கோவையாழி யென்கிற ஸாக்ஷாத்க்ருத ஸ்வபரவ்ருத்தாந்தர்க்கு யாத்ருச்சிகாதி களுண்டாகில் தோன்றும்.

கOஅ. செய்தநன்றி தேடிக் காணதே கெடுத்தாய் தந்தா யென்கிற அத்வேஷாபிமுக்யங்களும் ஸத்கர்மத் தாலல்ல.

கOகூ. எண்ணிலும் வரும் கணனைக்கு எண்டானுமில்லை.

கக௦. மதியால் இசைந்தோ மென்னும அநுமதிச்சைகள் இருந்தவ மென்றதை வென்னை இசைவித்த என்னிசைவினது.

௧௧௧. மாதவன் மலை நீர் கிழவென்று ஏறிடுமது—வ்யாவ்ருத்த்யுக்தி அந்யார்த்தம் அபுத்தி பூர்வகம் அவிஹிதம் பலவிஸத்ருசம் பலாந்தரஹேது.

௧௧௨. இவன் நடுவே அடியானென்று ஓலைப்படா ப்ரமாணம் பக்ஷபாதி ஸாக்ஷி வன்களவிலநுபவ மாகிற இந்திர ஞாலங்கள் காட்டிக் கொள்ளக் காப்பாரற்று விதி சூழ்ந்தது.

௧௧௩. வரவாறில்லை வெறிதே என்றறுதி யிட்டபின் வாழ் முதலென்கிற ஸூக்ருத மொழியக் கற்பிக்கலாவதில்லை.

௧௧௪. நலமருளினன் என்கொலென்று ஆமூலச்சூடம் அருளால் மன்னுமிவர்க்கு அன்புக் கடியானதுவே அடிசேருகைக்கும் ஸாதநம்.

௧௧௫. புணர்தொறு மென்னக் கலந்து பிரிந்து ஜ்ஞாந பக்திகளை வளர்த்தது கனங்குழையிடக் காது பெருக்குதலும் மாஸோபவாஸிபோஜநப் புறப்பூச்சும் போலே ஆற்ற நல்ல மாபோகச்சிரமமாக.

௧௧௬. இவற்றால் வரும் ஸம்ச்லேஷ விச்லேஷங்களாகிறன— எளியனாய் நிற்குமரியனாய் எய்தானென்கிற தர்சந ஸமமான மாநஸாநுஸந்தாநமும் திண்கொள்ளப் பெறாத மநச்சைதில்யமும்.

௧௧௭. புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவை அவைசரித்தவர்க்கு ப்ரியஹிதபரன் தான் துளக்கற வெங்கும் தழைக்க நடத்தும்.

௧௧௮. ஜ்ஞாநத்தில் தம்பேச்சு ; ப்ரேமத்தில் பெண்பேச்சு.

௧௧௯. தேறும் கலங்கியென்றும் தேறியும் தேறாதும் ஸ்வரூபம் குலையாது.

௧௨௦. அடியோம் தொடர்ந்து குற்றேவல் அடிச்சியோமடிக்கீழ் குற்றேவலாகை அவஸ்த்தாந்தரம்.

௧௨௧. வித்யை தாயாகப் பெற்றுப் பாலுமமுதுமான திருநாமத்தாலே திருமகள்போல வளர்த்த தஞ்சமாகிய தந்தை மற்றொருவர்க்குப் பேச்சுப்படாமல் விச்வபதி லோகபர்த்தா வென்னும் மணவாளரை நாவிரண்டிழை கொண்டு முப்பிரியான ப்ரஹ்ம ஸூத்ர பந்தத்தோடே வரிப்பிக்க, பரம்புருடன் கைக்கொண்டபின் சதுர்த்தியுள்புக்கு இடையீடு நடுக்கிடக்கும் நாள் கழித்து ஜந்மபூமியை விட்டகன்று சூழ்விசும்பிற்படியே உடன்

சென்று குடைந்து நீராடி வியன்துழாய் அஞ்சனத்திரள் நீறு நானப்பொடி பீதகவாடை பல்கலன்கொண்டு நோக்கியர் அலங்கரித்துப் பல்லாண்டிசைத்துக் கவரிசெய்ய நிறைகுடவிளக்கமேந்தி இளமங்கையரெதிர்கொள்ள வைகுந்தம் புக்கிருந்து வாய்மடுத்துப் பெரும்களிச்சியாக வானவர் போகமுண்டு கோப்புடைய கோட்டுக்கால் கட்டில் மிதித்து ஆரோஹித்து பரதாக்ரூரமாருதிகளைப் பரிஷ்வங்கித்த மணிமிகுமார்பிலே குருமாமணியாயணையும் வஸ்துவுக்கு மணிவல்லிப் பேச்சு வந்தேறியன்று.

கஉஉ. இன்பு மன்பும் முற்படுவது கொழுந்து விடுவதாகிறது கடிமாமலர்ப் பாவையோடுள்ள ஸாம்ய ஷட்கத்தாலே.

கஉஙூ. உண்ணாது கிடந்தோர் மாயையினை லென்னும் வீறுடையமுடிக்குரியாரோடு இத்திரு மண்ணோரன்ன வொண்ணுதல் பின்னைகொல் என்கிற ஒப்பு, தென்பால் நெடுமாடம் கடும் சிலை அம்பெரியூட்டி நீறெழுவெரித்த பெருந்தோற்றத் தாருயிர் காகுத்தன் ஆதியங் காலம் மண்புரை பொன்மாதின் துகளாடி எருதேழ்தழீஇச் சறையினரென்னு மவற்றிலே தோன்றும்.

கஉச. இவர்கள் தேடிநிற்கப் பொய்கை முதுமணல் முல்லைப் பந்தல் முற்றம் மச்சொடு மாளிகை அவ்வவ்விடம் புக்கு வாரிச் சிதைத்துப் பறித்துக் கிழித்துக் கோயின்மை குறும்பு செய்து அல்லல் விளைத்துக் கவருமுகக்கு நல்லவர் முழுசி ஆவரென்னும் தேன்மொழியாலே கோகுலத்தை மறப்பிக்கும் நகரஸ்த்ரீகள், நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறு பல்லாயிர மெண்ணிறந்தார் பாவம்—கடல் ஞாலம் மின்னிடை மல்லிகை வேய்மரு பேய்முலை முனிந்து மற்பொரு விறல் கஞ்சனை மங்கநூற்ற வாயும் தீர்ப்பாரென்னு மவற்றிலே தோன்றும்.

கஉரு. இராவணனில்* நசவாகக் குழைத்தவன் பின்தொடரவிருந்த வன்சிறையிலும் விதிதன் புணைவனென்று ஜீவிதாதிகளால் குறைவின்றி மாயும் வகை விஷசஸ்த்ரங்கள் தேடி வில்வலவாஹாவென்று இரங்கமெழாக் கொடுமைகள் சங்கித்து என்னையும் ஜீவந்தீமென்று ஆள்விட்டுச் சுடரையடைந்து அகலகில்லாமுற்றுவமை பெருமகளோடே.

கஉசு. பிரியில் இலேனுக்கு இளங்கோவும் அக்குளத்தில் மீனிறே.

கஉஎ. அழும்தொழும் ஸ்நேஹபாஷ்பாஞ்சலியோடே ருசிரஸாநுக்களில் கூவிக்கொள்ளும் பிரியாவடிமைக்கு சரணேசரணென்று வாளும் வில்லும்கொண்டு பந்துவும் பிதாவுமவரே

யென்னையும், அன்னை யென் செய்யிலென் ராஜ்யமும் யானே யென்று பெரும் செல்வமுமிச்சியாமல் வேண்டிச் சென்று திருவடியே சுமந்து விரைந்து வருமளவும் கண்ண நீர் பங்கமாக நிலந்துழாவிக் குடிக்கிடந்த கையறவும், கோதிலடிமை உறுமோ வென்பித்த புலன்கொள் நித்ய சத்ரு விசிந்தநமுமான ப்ராதாக்கள், அப்பொழுதைக்கப்பொழுது போருமென்னும் மாதா பிதாக்கள், செந்தீத் தண் காற்று இளநாகம் முதலான பகையறச் சிந்தை செய்து எங்கு முளனென்னும் பள்ளிப்பிள்ளை, முற்ற விட்டு மற்றிலே னென்னும் தர்மாத்மா, வாளி பொழிந்த நிர்க்குண விச்வாத்மா உள்ளேயுறைய வீரசரிதம் ஊனுக க்கற்பார் பாவம் மற்றிலே னென்னும் ராமதாஸன், பல்வகையும் கண்டு வெண்சங்கேந்தின ரூபபரனை ச்வேதன் முதலானோர் படிகளும் காணலாம்.

௧௨௮. குழலில் நெஞ்சும் அருகலில் சுவையுமான விவர் அவர்களளவல்லர்.

௧௨௯. எற்றைக்கு மென்றது தோன்றப் பிறந்து ஒப்பித்து வீசிக் காப்பிட்டுக் காட்டுக்கு முற்பட்டு தர்மம் சொல்லிக் கேட்டு சிஷ்யாதாஸீ பக்தைகளாய் பாடி வருடி இன்று வந்தென்பாரையும், சென்றுனூரும் நிவாஸதாஸ பேதம் கொள்வாரையும், தாமவராக பாவிப்பர்.

௧௩0 எழுவதோருரு அழிக்க, செய்கிற வழுவிலாவடிமைக்குப் பாஞ்சாலி படுத்துமதும் கௌஸல்யாநுவ்ருத்தியு மொப்பாக்குகை பரிசு.

௧௩௧. பெருக்காறு பலதலைத்துக் கடலை நோக்குமா போலே நெக்கொசிந்து கரைந்தலைந்திடிந்து உடையப் பெருகு காதல் கடலிடம் கொண்ட கடலை பஹுமுகமாக அவகாஹிக்கும்.

௧௩௨. அச்சேயத்ய மென்னுமது ஈரும் வேம் ஈரியாயுலர்த்த வென்னப்பட, சித்தம் சித்தாய் அல்லேனென்று நீங்க, கரணங்கள் முடியானேயிலவையாக, உடலமாத்மதர்மம் கொள்ள, காற்றும் கழியும் கட்டிஅழக் கொண்டபெருங்காதலுக்குப் பத்திமை நூல் வரம்பில்லையே.

௧௩௩. ஸம்பந்தோபாய பலங்களில் உணர்த்தி துணிவு பதற்றமாகிற ப்ரஜ்ஞாவஸ்த்தைகளுக்குத் தோழி தாயார் மகளென்றுபேர்.

கஙச. ஸகி வெறிவிலக்கி ஆசையறுத்து அறத்தொடு நின்ற மூன்றில் அநந்யார்ஹத்வமும், வாடி மெலிந்து பித்தேறி ஏறப் பேசிக் கட்டிழந்தகன்று சார்வதே வலித்தமை ஸாதகமாமோ வென்று மாதா அஞ்சிமுறைப்பட்டு முறையிடுகிற ஏழில் அத்யவஸாயமும், புத்ரி பலகால் ஆள்விட்டு ஆற்றாமை சொல்லிக் கவராதவை விட்டு இரைக்க மடலெடுத்துக் கண்புதையப் போக்கற்று உருநெஞ்சுள்ளெழக் கூடுநாள் தேடித் தாழ்த்ததுக் கூடி உசாத்துணையற்றுச் சூழவும் பகைமுகம் செய்யத் தடையில்லாதே புயக்கற்று மாலையும் காலையும் பூசலிடுகிற பதினேழில் த்வரையும் தெரியும்.

கஙரு. தோழிமாரன்னையரென்கிற பன்மை ரக்ஷகத்வாநுபந்த வாத்ஸல்யாதிவ்யவஸாயபுத்தி பேதத்தாலே.

கஙசு. அபிலாஷா சிந்தாநுஸ்ம்ருதீச்சாருசி பரபரமபக்தி களிலே பேதை முதலான பருவம் கொள்ளும்.

கஙள. மயில் பிறை வில் அம்பு முத்துப் பவளம் செப்பு பின் தோரன்னம் தெய்வவுரு விகாஸ சுத்தி காந்தி ஜ்ஞாநாநந்தா நுராகபக்த்யனுத்வ போக்யதாகதிகளை யுடைய அகமேனியின் வகுப்பு.

கஙஅ. சூழ்ச்சி அகற்றினீ ரென்னும் பழி. இணக்கி யங்ஙனே யென்னும் மேலெழுத்து, முன்னின்றாய் இவளை நீ ரென்னும் இருபடை மெய்க் காட்டு. நீ ரென்னே யென்னு முடன்பாடு, இடையில்லையென்னு முதறுதல், இருந்திருந்து நடந்தாளென்னும் கொண்டாட்டம் அவஸ்த்தாத்ரயவ்ருத்தி.

கஙகூ. தாயாரேதலர் உற்றீர்களென்னும் ஸாத்யஸித்த ஸாதநநிஷ்டரை; மகள் நம்முடையேதலர் யாமுடைத் துணையென்னும் ஸித்தஸாதந ஸாத்யபரரை.

கச0. நாலயலார் அயற்சேரியார் உபாயசதுஷ்டயாந்தர் யாமித்வபரர்.

கசக. கீழை மேலை வடக்கிலவை புறம்பாகத் தன் பற்றுள்ளசல்.

கசஉ. ஊரார் நாட்டாருலகர் கேவலைச்வர்யகாமஸ்வதந்த்ரர்.

கசங. இறுகலிறப்புக்கும் இறந்தால் தங்குமூரொக்குமே.

கசச. சிறு சீரார் சுளருகள் உபயவிவேகபரிகரம்.

கசரு. மாலைகங்குல் காலை பகல்—ரஜஸ்தமஸ் ஸத்த்வ சுத்த ஸத்த்வ ஜ்ஞாநங்கள்.

கசசு. நிலாமுற்றம் ப்ரஜ்ஞாப்ராஸாத மென்னு மெல்லிலம்.

௧௪௭. கலைவளை அஹம் மமக்ருதிகள்.

௧௪௮. பட்டம் சூடகமாவன—பராவர குருக்கள் பூட்டு மாத்ம பூஷணங்கள்.

௧௪௯. பந்து கழல்பாவை குழமணன் யாழ்தெற்றல் மதிய மடிசில் சாந்தம் பூணகில் சிற்றில் தூதை முதலாவன —குணத்ரய விசித்ர கர்மஸூத்ரத்தாலே கட்டி லீலையாக ப்ரேரிக்க எழுந் தெழுந்தும் சுழன்றுழன்றும் பறிபட்டும் அற்பசாரமாமவையு மாய் மதீயமென்னில் விட்டகலவும் ததீயமென்னில் இகழ் வறவும் முனிவது மிக்கால மீதோ வென்னப்படும் பொங்கைம் புலனில் போக்யாதிஸமூஹம்.

---

## மூன்றாம் ப்ரகரணம்

௧௫௰. சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞாநகர்மங்களைச் சிறகென்று குருஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்ய ஸ்தாநே பேசும்.

௧௫௧. விவேகமுகராய் நூலுரைத்து அள்ளலில் ரதியின்றி அணங்கின் நடையைப் பின்சென்று குடை நீழலிலே கவரியசை யச் சங்கமவை முரல வரிவண்டிசைபாட மாநஸபத்மாஸநத்திலே யிருந்து விதியினாலிடரி லந்தரமின்றி யின்பம்படக் குடிச் சீர்மை யிலேயாதல் பற்றற்ற பரமஹம்ஸராதலான நயாசலன் மெய்ந் நாவன் நாதயாமுநர் போல்வாரை அன்னமென்னும்.

௧௫௨. என்பெறுதி யென்ன ப்ரமியாது உள்ளத்தூறிய மதுவ்ரதமாய் தூமதுவாய்கள்கொண்டு குழல்வாய் வகுளத்தின் ஸாரம் க்ரஹித்துத் தேதென வென்று ஆளம்வைத்துச் சிறுகாலெல் லியம்போது குறிஞ்சி மருள் காமரம் கந்தாரம் தலைக் கொள்ளப் பாடித் துன்னிட்டு நெருக்க நீக்கென்று கடந்து புகும் தகை வறப் புக்கு வண்டொத்திருண்ட குழலிலே சங்கையற மருவி அருளாத யாமென்றோடி வந்து வாசமேயூதி வண்டே கரியான தெய்வ வண்டோடே சேர்விக்கும் சேமமுடை நாரதன் முனி வாஹனர் தம்பிரான்மார் போல்வாரை வண்டு தும்பியென்னும்.

௧௫௩. கண்வலைப்படாதே அகவலைப்பட்டு வளர்த்தெடுப் பார் கையிருந்து தயிர் நெய்யமர் பாலமுதுண்டு ஒருமிடறாய்ப் போற்றி ஒரு வண்ணம் திருந்த நுவலாததுக்கு என்பிழைக்கும் நீயலையே நல்வளம் துரப்பனென்னு மவற்றுக்கு முகந்து, சொல் லெடுத்துச் சோர்ந்தவாறே கற்பியா வைத்த மாற்றம் கைகூப்பி

வணங்கப் பாடி ஆலியா வழையா பராபிமாநத்திலே ஒதுங்கின நம் பிக்கன்பர் தலைமீதடிப்பொடி உடையவருடையார்போல்வாரைக் கிளிபூவை குயில் மயிலென்னும்.

கருச. ஆசறுதூவியென்னும் பாஹ்யாப்யந்தர சுத்தி யோடே திரையுகளும் வ்யஸநவ்யதையற்றுத் தாய்வாயிலுண்ணும் பிள்ளைக்கிரை தேடி வைகலுடன் மேய்ந்து நுங்கால் பைங்கானமென்று ப்ரஹ்மரதம் பண்ணிக் கொடுத்தவை கொண்டு நல்ல பதத்தையும் வேண்டேனென்னும் தனிப்பெரும் பித்தர் நம்முதலிகள் போல்வாரை நாரை கொக்கு குருகென்னும்.

கருரு. பூண்ட நாள் சீர்க் கடலையுட்கொண்டு திருமேனி நன்னிறமொத்து உயிரளிப்பான் தீர்த்தகரராய் எங்கும் திரிந்து ஜ்ஞாநஹ்ரதத்தைப் பூரித்துத் தீங்கின்றி வாழ நிதி சொரிந்து கொடுத்து நினையாதே லஜ்ஜித்து வெளுத்தொளித்துக் கண்டுகந்து பரஸம்ருத்தியே பேறான அன்பு கூருமடியவர் உறையிலிடாதவர் புயற்கை அருள்மாரி குணந்திகழ் கொண்டல் போல்வாரை மேகமென்னும்.

கருசு. தம்பிழையும் சிறந்த செல்வமும் படைத்த பரப்பும் தமரோட்டை வாஸமும் மறப்பித்த க்ஷமாதீக்ஷா ஸாரஸ்ய ஸௌந்தர்யங்களை யுணர்த்தும் வ்யூஹவிபவ பரத்வ த்வயார்ச்சைகள் தூது நாலுக்கும் விஷயம்.

கருஎ. பகலோலக்கமிருந்து கறுப்புடுத்துச் சோதித்துக் காரியம் மந்த்ரித்து வேட்டையாடி ஆராமங்களிலே விளையாடும் ராஜநீதி ஆதும் சோராமல் செங்கோல் நடாவுகிற பாரளந்த வென்னும் மூன்று முடிக்குரிய இளவரசுக்கு விண்மீதென்கிற ஐந்திலும் காணலாம்.

கருஅ. தமருகந்த அடியோமுக்கே யென்னும் பின்னானார் வணங்குமிடத்திலே எல்லாம் பூர்ணம்.

கருகூ. வன்பெரு வானக முதலுய்ய இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன்திருப்பதி, வடிவுடை கடலிடம் கட்கிலீ யென்னுமவற்றில் இவள் திறத்தென்கொலோ வென்பிக்கிற வ்யூஹஸௌஹார்த்த ப்ரதாநம்.

கசுய. மண்ணோர்விண்ணோர்வைப்பில் போகின்றவுழலகுக் குயிர்பாசம்வைத்த நிகரில்வாத்ஸல்யமுஜ்ஜ்வலம்.

கசுக. உபயப்ரதாநப்ரணவமான உறை கோயிலில் எத்தேவுமென்னும் பரேசத்வம் பொலியும்.

கசுஉ. வைஷ்ணவ வாமநத்தில் நிறைந்த நீலமேனியின் ருசி ஜநகவிபவ லாவண்யம் பூர்ணம்.

கசுந. ருசிவிவசர்க்குப் பாதமே சரணாக்குமௌதார்யம் வானமாமலையிலே கொழுந்து விடும்.

கசுச. களைகணற்றாரை யுருக்கும் மாதுர்யம் குடமூக்கிலே ப்ரவஹிக்கும்.

கசுரு. மெலிவிலும் சேமம் கொள்விக்கும் க்ருபை தென்னக ரிலே நித்யம்.

கசுசு. வ்யவஸாயஜ்ஞர் ரக்ஷண ஸ்தைர்யம் பம்போத்தர தேசஸ்த்தம்.

கசுஎ. விளம்ப விரோதமழிக்கும் விருத்தகடநாஸாமர்த்யம் நன்னகரிலே விஸ்தீர்ணம்.

கசுஅ. கடிதகடகவிகடநா பாந்தவம் அவ்வூரிலே த்விகுணம்.

கசுகூ. கைம்முதலிழந்தாருண்ணும் நிதியின் ஆபத்ஸகத்வம் புகுமூரிலே ஸம்ருத்தம்.

கஎ0. சென்று சேர்வார்க்கு உசாத்துணையறுக்கும் ஸௌந் தர்யம் மாநகரிலே கோஷிக்கும்.

கஎக. ப்ரவண சித்தம் பரத்வ விமுகமாக்கும் ஆநந்தவ்ருத்தி நீணகரிலே.

கஎஉ. ஸாதரரைப் பரிசழிக்கும் சேஷ்டிதாச்சர்யம் குளத்தே கொடிவிடும்.

கஎந. ச்ரமமனம் சூழும் ஸௌகுமார்ய ப்ரகாசம் ஆய்ச் சேரியிலே.

கஎச. மஹாமதிகள் அச்சம் கெட்டு அமரும் சௌர்யாதிகள் சிற்றாற்றிலே கொழிக்கும்.

கஎரு. ஸாத்யஹ்ருதிஸ்த்தனையும் ஸாதந மொருக் கடுக்கும் க்ருதஜ்ஞதாகந்தம் தாயப்பதியிலே.

கஎசு. அவகாஹித்தாரை அநந்யார்ஹமாக்கும் நாயகலக்ஷ ணம் வளம்புகழூரிலே குட்டமிடும்.

கஎஎ. போக்யபாகத்வரை தெளிந்தசிந்தைக்கு முன்னில் மூன்றிலும் ப்ரகடம்.

கஎஅ. போகத்தில் தட்டுமாறும் சீலம் காட்கரையிலே கரை யழிக்கும்.

கஎகூ. மஹாத்மாக்கள் விரஹம் ஸஹியாத மார்த்தவம் வளத்தின் களத்தே கூடு பூரிக்கும்.

கஅ௰. பிரிந்த துன்பக் கடல் கடத்தும் விஷ்ணு போதாந்ரு சம்ஸ்யம் நாவாயிலே நிழலெழும்.

கஅக. சரண்யமுகுந்தத்வம் உத்பலாவதகத்திலே ப்ரஸித்தம்.

கஅஉ. மார்க்கபந்து சைத்யம் மோஹநத்தேமடுவிடும்.

கஅ௩. ஸைந்ய புத்ரசிஷ்ய ஸாத்யஸித்த பூஸுரார்ச்சநத்துக்கு முகநாபி பாதங்களை த்வாரத்ரயத்தாலே காட்டும் ஸாம்யம் அநந்தசயநத்திலே வ்யக்தம்.

கஅச. மோக்ஷதாநத்தில் ப்ரணத பாரதந்த்ர்யம் வளம்மிக்க நதியிலே கரைபுரளும்.

கஅரு. த்யாஜ்யதேஹவ்யாமோஹம் மருள்கள் கடியும் மயல் மிகு பொழிலிலே தழைக்கும்.

கஅசு. அங்கீகரிக்க அவகாசம் பார்க்கும் ஸ்வாமித்வம் பெருநகரிலே பேர் பெற்றது.

கஅஎ. இவற்றில் ப்ராவண்யம் இவள் பரமே யென்னவுண்டாய் ஷோடசகலாபூர்ணமான சந்த்ரமண்டலம் போலே பதினாறு திருநக்ஷத்ரம் நிரம்பினவாறே தேவபோக்யமானவதிலம்ருதம் போலன்றிக்கே என்னுத் தமிழரிசைகாரர் முதற்பத்தர் வானவரென்னம்மான் பார்பரவென்னும்படி ஸேச்வரவிபூதிபோக்யமான பாலோடமுதன்ன மென்மொழி முகம் செய்தது.

கஅஅ. நீர்பால் நெய்யமுதாய் நிரம்பினவேரி நெளிக்குமா போலே பரபக்த்யாதிமயஜ்ஞாநாம்ருதாப்தி நிமிகிற வாய்கரை மிடைந்து மொழிபட்டு அவாவிலந்தாதி யென்று பேர் பெற்றது.

கஅகூ. மனம்செய் எல்லையில் ஞானவின்பத்தை நின்மலமாக வைத்தவர் ஞானப்பிரானை ஞானத்து வைம்மினென்றவிது—தத்வவிவேகநித்யத்வாநித்யத்வ நியந்த்ருத்வ ஸௌலப்ய ஸாம்யாஹங்காரேந்த்ரிய தோஷ பல மந: ப்ராதாந்ய கரண நியமந ஸுக்ருதிபேத தேவாஸுரவிபாக விபூதியோக விச்வரூபதர்சந ஸாங்க பக்தி ப்ரபத்தி த்வைவித்த்யாதிகளாலே அன்றோதிய கீதாஸமமென்னும்.

கசூ௰. அது தத்த்வோபதேசம்; இது தத்த்வதர்சி வசநம்.

கசூக. அது ஐவரை வெல்வித்துப் பதிற்றைந்திரட்டிப் படச் சொன்னது; இது நாடாகத் தோற்றேமென்று ஐயைந்து முடிப்பான் சொன்னது.

கககஉ. அங்கு நம்பிசரணென்று தொடங்கி முடிவில் அப்ரிய மென்றது; இங்கு பரமேயென்றிழிந்து பொலிக வென்று உகந்தது.

கககங. அதில் ஸித்ததர்மவிதி; இதில் வித்யநுஷ்டாநங்கள்.

கககச. பகவன் ஞானவிதி பணிவகையென்று இவரங்கீ காரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்.

கககரு. வேதவேத்ய ஜீவதிகோபதேசம் ஆவித்யரளவிலே; அஜ்ஞர் ஜ்ஞாநிகள் ஜ்ஞாநவிசேஷயுக்தர் ஸர்வஜ்ஞனென்னுமல் இவர் திருத்துவர்.

கககசு. அறியாதார்க்கு உய்யப்புகுமாறும் இக்கரையேறி னார்க்கு இன்பவெள்ளமும், நிலையறியாதார்க்கு ஆழுங் காலும் கரையேற்றுமவனுக்கு நாலாறு மறிவிக்க வேணும்.

ககஎ. அவன்முனிந்தார்க்குத் தாம் கண்டது, தம்மை முனி வார்க்குத் தம்கண், காணுதது காண்பார்க்குக் கண் மாறுமிடம், ராகாந்தனுக்கு மாயாதோஷம் இவர் காட்டுமவை.

கககஅ. ஸாதநஸாத்யஸ்த மத்யஸ்தரைவிட்டு அவற்றில் கலங் கும் ஜீவேச்வரர்க்கு வீடுமின் நினைமின் பிடித்தேன் விடுவேனோ வைத்தெழவூது வாடி நிற்கக் கன்மமன்று ஆன்பின் கைகழியேல் உழிதராய் என்சொற்கொள் என்று இவர் பலகாலும் ஹிதாஹிதங்கள் சொல்லுவர்.

கககக. கதிர்ஞானமூர்த்திக்கு உணர்த்துவது ப்ரேமத்தாலே; தமமூடுவார்க்கு வேட்கை யெழுவிப்பது ஞானத் தாலே.

உ00. உயிர் மாய்தல் ஆழுமென்னுருயிரென்னும் பரதுக் கம்ஸஹியாமை இரண்டிலு முண்டு.

உ0க. என்னதுன்னதாவியிலே அறிவாராத்மா வென்று அவன் மதம் தோன்றும்.

உ0உ. இருத்து மெண்டானுய்ப் பொய்கலவாது அன்பு செய்து பற்றிலனுய் க்ஷுத்த்ருட் பீடித நிர்த்தநரைப் போலே கண்டுகொண்டுண்டுபருகிப் பரிஜனுதிகளோடே தன்னைத்தந்து என் செய்வனென்றேயிருந்து அகிலபரத்தையும் ஸமர்ப்பிக்க, அது சுமந்து அல்லுநன் பகலும் போகு என்றுலும் அகல்வானுமல்ல னுய் போகேலென்றுல் உகப்பையும் தவிர்ந்து விதிவகையே நடத்துமவனே உபதேசஸத்பாத்ரம்.

உ0௩. நண்ணாதார் மெய்யிலூன் ஆசை நிர்வேதத்தோடே ஆஸதிக்யாமாநித்வாதிகள் விஞ்சின ப்ரணிபாதாபிவாதந பரிப்ரச்ந ஸேவாபரர்க்கு உளங்கொள் பேசுமளவன்றென்னு மர்த்தத்தை வம்மின் விரோத மீனச்சொல் எவ்வுயிர்க்குமறியவென்று அடைவு கெட அதபஸ்கர்க்கு உபதேசிக்கிறது ஞாலத்தார் பந்த புத்தியும் அநர்த்தம் கண்டு ஆற்றாமையும் மிக்கக்ருபையுமிறே.

உ0௪. தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவ ரடிபணிந்தவர்க்குமே இவையுள்ளது.

உ0௫. க்யாதிலாப பூஜாபேக்ஷயற மலர் நாடி ஆட்செய்ய உய்யக்கொண்டு ஆரைக்கொண்டு வாளும்வில்லும் கொண்டென்கிற இழவுகள் தீரப் பெற்றது.

உ0௬. ப்ரஹ்மநிஷ்டரும் ஸம்வத்ஸரவாஸிகளுமாகில் ஏபாவம் பயனன்றாகிலும் சேராது.

உ0௭. மெய்ந்நின்று மங்கவொட்டுக்கு நடுவு அநுபவகீர்ப் போபதேசம்.

உ0௮. இவற்றுக்கு மந்த்ரவித்யநுஸந்தாநரஹஸ்யங்க ளோடே சேர்த்தி.

உ0௯. அளிப்பானடியேனடைக்கலம் சூடிய பொய்யா தானு மழுந்தாரென்று ஸ்வரூபவிரோதி நிவ்ருத்திகளை யும் தாமரையுந்திப் பெருமாமாயனுளாகவே வாழிய வென்று ப்ராப்ய பலங்களையும் நெறிகாட்டி மனத்துக் கொண்டு கண்ணனலடித்துக் கண்டிலமால் யாதாகி லென்று உபாயத்தையும் சொன்னவை மந்த்ரச்லோ கங்களோடே சேரும்.

உ௧0. த்வயார்த்தம் தீர்க்கசரணாகதியென்றது ஸாரஸங்க்ர ஹத்திலே.

உ௧௧. மூன்றில் சுருக்கிய ஐந்தையும் உயர்திண்ணணை யொன்று பயிலேறு கண் கரு வீடு சொன்னல் ஒருக் கொண்ட நோற்ற நாலும் எம்மா வொழிவில் நெடுவே யென்கிற இருபதிலே விசதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே ஐந்தையும், அருளினன் வீடு பெற்ற வென்கையாலே ஐந்திலு மிரண்டையும், தொழுது களித்தேன் சொல்லுப் பெற்றேன் பணிசெய்யென்கிற முக்தலக்ஷ ணவ்ருத்தியாலே இரண்டிலொன்றையும் இதுக்கு ப்ரமேய மென்னும்.

உ௧உ. ரஹஸ்யத்துக் கோரெழுத்தும் அதுக் கோருருவும் போலேயானவற்றிலே இமையோரதிபதி அடியேன் மனனே

பொய் மயர்வு பிறந்தருளினன் விண்ணப்பம் தொழுதெழென்ற பஞ்சகத்தோடே அவித்யாதிஸ்வரூபஸ்வபாவாத்மேச்வர பந்த ரக்ஷணக்ரம குண விக்ரஹ விபூதியோக ததீயாபிமானோபதேச விஷயநிர்ணயாபதேசஹேத்வாதிகளும் ஸங்க்ருஹீதம்.

உகரு. அடிதொழுதெழென்ற விதிலே வஸ்துநிர்த்தேச நமஸ்கார ஸீஸாக்களுமுண்டு.

உகச. சாதுசனம் நண்ணு மயர்வற மாசறுக்கும் தெருள் கொள்ளப் பத்தராவரடிமையறவுரிய நோய்களறுக்கும்உடைந்து எற்றரும் வானின் தாளின்கீழ் அடிக்கீ ழின்பக்கதிபயக்கும் ஊடுபுக்கு மூவுலகு முருகாநிற்ப ரென்னும் ஸாம்யத்தாலே வாச்யன் பத்தினையதோற்றம் போலே தோற்றங்களாயிரத்தின் பத்துப் பத்தான விதினுவிர்ப்பாவம்.

உகரு. ஐந்தினொடொன்பதோடொருபத்தென்னுமவை போலே நூறே சொன்ன பத்துநூறுஓராயிர மென்றதும் ஸாபிப்ராயம்.

உகசு. பாட்டுக்கு க்ரியையும் பத்துக்குக் கருத்தும் போலே நூற்றுக்கு உபதேசப்பத்து.

உகஎ. பகவத் பக்த பரங்கள் ஆச்ரயண விதிசேஷங்கள்.

உகஅ. பரத்வ காரணத்வ வ்யாபகத்வ நியந்த்ருத்வ காருணிகத்வ சரண்யத்வ சக்தத்வ ஸத்யகாமத்வாபத்ஸகத்வார்த்திஹரத்வ விசிஷ்டன் மயர்வையறுக்க, தத்த்வவேதநமறப்பற்று ஜ்ஞப்தி பல முக்தி தலைசேர நிஷ்கர்ஷித்து மோக்ஷபலவ்ருத்தி செய்யவர்த்தித்துப் புருஷார்த்தபலாநயருசியொழிந்து விரக்திபலராகம் கழிய மிக்கு ப்ரேமபலோபாயத்தேபுகுந்து ஸாதநபலோபகாரக் கைம்மாறின்றி க்ருதஜ்ஞதாபலப்ரதிக்ருதமானத்தை யுணர்ந்து ஆத்ம தர்சநபலப்ராப்தி மரணவதியாகப் பெற்றுக் காலாஸத்திபலகதிக்குத் துணை கூட்டின தம் பேற்றைப் பிறரறியப் பத்துத்தோறும் வெளியிடுகிறார்.

---

# நான்காம் ப்ரகரணம்

உகக. பரபரனுய்நின்ற வளவேழ்வைப்பா மவையுளும்பர் வானவரதிபதி மயர்வறமன்னி மனம் வைக்கத் திருத்தி மறக்குமென்று நல்கிவிடாதே மன்ன, அயர்ப்பிலனறுத்தேன் என் சொல்லிமறப்பனோ வென்னும்படி தத்த்வஜ்ஞரானவர் சுடரடியெம்பிரானை விடாது கண்டாய் நீயும் நானுமென்கிற ஸஹ்ருதயாநுபவம் ஸம்ஸாரிகளுக்குமாம்படி வீடுமினென்று த்யாஜ

யோபாதேய தோஷ குணபரித்யாக ஸமர்ப்பணக்ரமத்தை ஸாலம்பநமந்த்ரமாக வுபதேசித்து எளிதாகவவதரித்துப் பிழைகளை ஸஹித்துப் புரையறக் கலந்து அல்பஸந்துஷ்டனாய் அம்ருதமே ஔஷதமாக்கி நீர்புரையத் தன்னை நியமித்து போகத்தை ஸாத்மிப்பித்து பக்திகணனைகளுக்கு ஒக்கவருமவனுடைய ஸேவைக்கு எளிமையுமினிமையு முண்டு, தொழுதால் அரும்பயனாயதரும், உத்யோகத்தே வினைகளும் மாளும், அவனுரைத்த மார்க்கத்தே நின்று இருபசை மலமற வுணர்வுகொண்டு நலம் செய்வதென்று தாம் மயர்வறமதிநலமருளி பஜநத்திலே சேர்க்கிறார் முதற்பத்தில்.

௨௰. சோராத மூவா வேர்முதலாய் உலகம் படைத்தவனென்கிற சிதசித்த்ரயத்ரிவித காரணமானவன் அறியாதனவறிவிக்க உள்ளம் தேறித் தூமனம் மருளிலென்னும் ஜ்ஞாநபலமான ஒளிக்கொண்ட மோக்ஷம் தேடிவாட, உலராமலாவி சேர்ந்து சிக்கனப் புகுந்து ஸம்பந்திகளும் சேர்தல் மாறினரென்னை வாழ்வித்து உபகரிக்கிற நீந்தும் கெடலில் எம்மாவீட்டை உபயாநு குணமாக்கினவர் ஆச்ரயணீயனுக்குப் பூர்வோக்த பரத்வத்தைஸ்தாபிக்கிற ஸகலபலப்ரதத்வகாரணத்வ சேஷசாயித்வச்ரிய:பதித்வஸௌலப்யாதிகளைத் திண்ணனனைவதென்று வெளியிட்டு, கள்வாதீர்த்த னென்று வசநப்ரத்யக்ஷங்களும் காட்டிப் புலனைந்தென்று ஸம்ஸார மோக்ஷஸாதந து:க்காநந்தரஸம் முன்னாக விதிக்கிற அந்தர்கத குணோபாஸநத்தை மதித்துப் பெருக்கி மூழ்கிய மூந்திக் கீழ்மை வலம் சூதும் செய்து இளமை கெடாமல் செய்யும் க்ஷேத்ர வாஸ ஸங்கீர்த்த நாஞ்சலிப்ரதக்ஷிணகதிசிந்தநாத்யங்கயுக்த மாக்குகிறார் இரண்டாம் பத்தில்.

௨௰௧. முழுதுமாய் எங்கணு மொழிவற அருவாகி நின்று தோய்விலனும் ஸர்வவ்யாபகன் தீர்ந்தவடியார்களைத் தாளிணைக் கீழ்க் கொள்ளும் தன் படிக்கும் நீதந்தமாமாயப் புணர்வினைப் பிறப்பழுந்தி அலமருகின்றேன் வேரறவரிந்து எந்நாளெங்கு வந்து தலைப்பெய்வனென்று கழித்துப் புகும் தம் காதலுக்கும் ஸத்ருசமாகக் கண்டு கொள்ளென்னு மூனமில் மோக்ஷ பலமான முடிச்சோதியி லநுபவத்தாலே நித்யவஸ்து நீடுபெற்று அவச்சேதமற்றவடிமை செய்யவேண்டும்படி ஸர்வாத்மபாவத்தைப் புகழ்ந்து சொல்லிப் பாடியேத்திப் பிதற்றி யெழுந்தும் பறந்தும் துள்ளிக் குனித்துத் தடுகுட்டக்கும்பிடுநட்டமிட்டுச் சிரிக்கக் குழைந்து நையும் ப்ரீதியுகள, தம்மடியாரென்ன வுடன்கூடும் ஸாத்யம் வளர, பைகொள் பாம்புபோலே இந்த்ரியவ்ருத்தினியமமறப் பாட வந்த கவியன்றிக்கே யடைத்தான் ச்லோக க்ருத்தாய்;

குறைமுட்டுப் பரிவிடர்துயர் துன்பமல்லல் துக்கம் தளர்வு கேடுக ளின்றி அம்ருதாநந்தமக்நரானவர் செய்யதாமரைக் கண்ணன் அமரர் குல முதலென்று அஞ்சாதபடி எளிவருமிணைவனு மென் றவை பரத்வமாம்படி அவனுடைய ஸௌலப்ய காஷ்ட்டையைக் காட்டி வழியைத் தருமவன் நிற்க இழியக் கருதுவதென்னுவது? வேண்டிற் றெல்லாம்தரும், தன்னுகவே கொள்ளும், கவி சொல்ல வம்மினென்று முக்தைச்வர்யத்தை முன்னிட்டு ச்வவ்ருத்தியை மாற்றி ஸ்வவ்ருத்தியிலே மூட்டுகிறார் மூன்றும்பத்தில்.

உஉஉ. ஈசனை யீசனீசன் பாலென்ன வர்கொள் வானத்தும் ஆயே யென்கிற வ்யாப்தி நிறம்பெறத் தனிக்கோல் செலுத்தும் ஸர்வநியந்தா ஒழிவில் காலத்துக்குச் சேர பூர்வ போகங்களை ஓது மாலெய்தின சாபலத்துக்குச் சேர ஸமகாலமாக்கிப் போதால் வணங்காமை தீர்த்த ப்ரணயித்வத்திலே காதல் மையலேறிய பித் தாய் தேசதூரத்துக்குக் கூவியும் கொள்ளா யென்றது தீர, கண்ட சதிரையும் ஒரு நிலமாகக் காட்ட, வீவிலின்பம் கூட்டிணையென்று முக்தபோகமாநஸப்ராப்திபலமான தேவதாந்தராத்மாத்மீய லோகயாத்ரைச்வர்யாக்ஷரங்களில் வைராக்யம், உன்னித்து உயி ருடம்பினுல் கொடுவுலகம் வேட்கையெல்லாமொழிந்தே னென்னவுடையரானவர் ஒருநாயகமென்று ராஜ்யஸ்வர்காத் மாநுபவால்பாஸ்திரத்வஸாவதிகத்வாதிகளையும், ஆடு கள்ளி றைச்சி கரும்செஞ்சோறுகிற நித்யங்களாலே இளந்தெய்வத் துக்கு இழைத்தாடும் நிஹீநதையையும், பேசநின்ற தேவதாஜ் ஞாநாசக்திஸாபேக்ஷத்வாதிகளையும் இலிங்கத்து விளம்பும் பாஹ்ய குத்ருஷ்டிமத தமோ நிஷ்டதையையும் சொல்லி, ஓடிக் கண்டீர் கண்டும் தெளியகில்லீர் அறிந்தோடுமின் ஆட்செய் வதே உறுவதாவதென்று விரக்திபூர்வகமாக ஆச்ரயணத்தை ருசிப் பிக்கிறார் நாலாம்பத்தில்.

உஉ௩. ஆவாவென்று தானே தன்னடியார்க்குச் செய்யும் தொல்லருளென்று பரத்வாதிகளையுடையவன் எவ்விடத்தா னென்னும் பாவியர்க்கும் இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹ முடையவன் பொய் கூத்து வஞ்சக்களவு தவிர முற்றவும் தானுய் உன்னைவிட்டென்னப்பண்ணின விரக்திபலபரமாத்மராகம் பேரமர் பின்னின்று கழியமிக்கு யானேயென்ன வாய்ந் தாற்றகில்லாது நீராய் மெலிய ஊடுபுக்கு வளர விஷவ்ருக்ஷபலங் கள் கைகூடினவர் அடிமை புக்காரையும் ஆட் செய்வாரையும் காண லோகத்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர் குழாங் களைக் கண்டு காப்பிட்டு ப்ரஹ்லாத விபீஷணர் சொற் கேளாத அரக்கரசுரர் போல்வாரைத் தடவிப் பிடித்து தேசகாலதோஷம்

போக எங்குமிடங் கொண்டவர்களை மேவித் தொழுது உஜ்ஜீவி யுங்கோள், நீங்கள் நிறுத்துகிறவர்களை தேவதைகளாக நிறுத்தின வனை மேவிப் பரம்புமவரோடொக்கத் தொழில் யுகதோஷ மில்லையாமென்று விஷ்ணுபக்திபரராக்கிக் கண்ணுக்கினியன காட்டலாம் படியானார் கண்ணிலே நோக்கிக் காணும் பக்தி ஸித்தாஞ்சநத்தை யிடுகிறார் அஞ்சாம்பத்தில்.

௨௨௪. என்னையும் யாவர்க்கும் சுரர்க்காய் அடியீர் வாழ்மினென்று கருணையாலே *ஸர்வலோக பூதேப்ய: என்றவை கடலோசையும் கழுத்துக்கு மேலுமாகாமல் உபாயத்வம் கல் வெட்டாக்குகிற சரண்யன் அஜ்ஞாநாசக்தி யாதாத்ம்யஜ்ஞாநங்களை வாலன்றிக்கே அங்குற்றேன் என்னான் புணரா யென்னும்படி மெய்யமர் பக்தி பூம பலமாகவும் அநந்யகதித்வமுடைய தமக்குப் பாதமே சரணாக்க அவையே சேமங் கொண்டு ஏக சிந்தையராய் திர்யக்குக்களையிட்டு ஸ்வாபிப்ராயத்தை நிவேதித்து விளம்பரோஷ முபாயத்தாலேயழிய உருகாமல் வரித்ததும் நண்ணி வணங்க பலித்தவாறே ஸப்ரகாரமாக ஸக்ருத்கரணீயமென்று புராண பௌராணிகர் த்யாஜ்யாம்சமாக்கின சிதசித் ப்ராப்யப்ராபகா பாஸங்களைக் கைவலிந்து கைகழலக் கண்டும் எல்லாம் கிடக்க நினையாதகன்றும் ஆளீர் மேவீருநீரென்று ததீய சேஷமாக்கியும் புறத்திட்டுக்காட்டியென்று ப்ரஸங்கிக்கில்முடியும்படிவிட்டு, தந்தைதாயுண்ணும்சோறு மாநிதி பூவையாவையுமொன்றே யாக்கி, தளர்வேனோ திரிவேனோ குறுகாதோ முதல்வாவோ வென்னு மார்த்தியோடே திரிவிக்கிரமனைக் குறள் கோலப் பிரானாய் அடியை மூன்றையிரந்த வன்கள்வன் கண் முகப்பே அகல் கொள் திசை வையம் விண்ணும் தடவந்த தடந்தாமரைகளை இணைத் தாமரைகள் காண இமையோரும் வரும்படி சென்று சேர்ந்த உலகத் திலதத்தே கண்டு அகலகில்லேனென்று பூர்வ வாக்யமநுஸந்தித்தவர் பிணக்கறத் கொடங்கி வேதப் புனித விறுதி சொன்ன ஸாத்யோபாயச்ரவண ஸசோகஸஜாதீயர்க்குத் தந்தனன் மற்றோர் களைகணிலம் புகுந்தேனென்று ஸ்வஸித்தோபாய நிஷ்டையை உக்த்யநுஷ்டாநங்களாலே காட்டுகிறார் ஆறாம்பத்தில்.

௨௨௫. எண்ணிலாக் குணங்கள் பாலதுன்ப வேறவன் மாயாப்பல்யோகு செய்தியென்னு மாச்சர்ய சக்தி யோகத்தாலே தெளிவுற்றவர்க்கு எற்றரும் வைகுந்தத்தை யருளும் ப்ராபகத்வம் புற்பாவெறும்பு பகைவனுக்கு மாக்க வல்ல ஸர்வசக்தி, பாதமகல இல்லாததம்மை அகற்றுமவற்றின் நடுவே யிருத்தக் கண்டு நலி

வான் சுமடுதந்தாய் ஓவென்று ஸாதனபலமான ஆக்ரோசத் தோடே பழியிட்டுக் கங்குலும் பகலும் அடைவற்ற ஆர்த்தியைக் கோயில் திருவாசலிலே முறைகெட்ட கேள்வியாக்கித் தேற்ற வொண்ணாதபடி தோற்று ஒன்றி நிற்கப் பண்ணின பலாதாரம் மற்றும் கற்பாரிழ்விலே சுவறிப் பழைய தனிமைக் கூப்பீடுதலை யெடுத்துச் சூழவும் பகைமுகம் செய்ய எடுப்பும் சாய்ப்புமான க்லேசம் நடக்க உபாயாதிகாரதோஷமொழிய மாயங்கள் செய்து வைத்த வைசித்திரியைக் கேட்க ஐச்சமாக விருத்தி உறக் கொண்ட ஸ்வபர ப்ரயோஜநத்தை யருளிச் செய்ய என் சொல்லி எந்நாள் பார் விண்ணீர் இறப்பெதிர் எதுவுமென்கிற உபகாரஸ்ம்ருதியோடே தன் சரிதை கேள்வியாகாமல் இன்பம் பயக்க விருந்த நிலத்தேவர் குழுவிலே பாட்டுக் கேட்பிப்பதாக காந கோஷ்டியையும் தேவபிரானறிய மறந்தவர் சரமோபாய பரரா ஞர்க்கு நீணகரமது துணித்தான் சரணன்றி மற்றொன்றிலம் உள் ளித் தொழுமின் என்று ப்ராப்யஸாதநாவதியை ப்ரீதியாலே ப்ர காசிப்பிக்கிறார் ஏழாம்பத்தில்.

௨௨௬ தேவிமார் பணியா நேர்பட்ட நல்ல கோட்பாடு என் னும்படி சக்தியாலே நித்யமாகக் கல்பித்த பத்நீ பரிஜநாதிகளை யுடைய ஸத்யகாமன் கொண்ட வாக்வ்ருத்தியையும் மறப்பிக்கும் கலக்கமும் சங்கையும் அச்சமும்தீர, தலைச்சிறப்பத் தந்தவதில் க்ருதஜ்ஞதாபலப்ரத்யுபகாரமாக வேந்தர் தலைவன் கந்யகாதாநம் போலே ஆரத்தழுவி அறவிலை செய்த ஆத்ம லாபத்தாலே அதீவ விளங்கிப் பணைத்து ஜந்மபாசம்விட்டு ஆத்வாரம் ஆளுமாளா ரென்று பரிந்து அநுரூபனோடே அமர்ந்து பிரிவில் க்ருபண தசை யாகத் துவரும் ஸீதா குணங்களாலே ப்ரீதி வர்த்தித்து, இத்திக்க வுள்ளே உறைந்து கண்டு கொண்டிருந்து அமாநுஷபோகமாக் கினவன் மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினை நோய் மறுவ விடாமல் சிறியேனென்றதின் பெருமையைக் காட்ட தேஹாதி களில்பரமாய் நின்றுநினைக்கில்லக்ஷ்மீதுல்யமாய் அவர்க்கே குடிகளாம் பாதந்த்ரஸ்வரூபத்தை யநுஸந்தித்தவர் ஸ்வஸாதநஸா த்யஸ்தர் இருகரையராகாமல் மண்ணவரும் வானவரும் நண் ணுமத்தையே குறிக்கொண்மின் உள்ளத்தென்று ப்ராப்யைகபர ராக்குகிறார் எட்டாம் பத்தில்.

௨௨௭. எண்டிசையும் அகல்ஞாலம் எங்கு மளிக்கின்ற ஆலின்மேலென்னும்படி நித்யபோகபாத லீலோபகரணத்தின லயாதிகளைப் போக்குமாபத்ஸகன் ஆருயிரென்னப்படுத்தின **ஆத்மதர்சநபலாநுபவ பரம்பரையைக் கூவுதல் வருதலென்று**

முடுகவிட்டு ஏகமெண்ணிக் காணக்கருதி எழ நண்ணி நினைதொறு முருகியலற்றிக் கவையில் மனமின்றிப் பதினாலாண்டு பத்துமாஸ மொருபகல் பொறுத்தவர்கள் ஒருமாஸ தினஸந்த்யையில் படுமது க்ஷணத்திலேயாக இரங்குகிற த்வரைக் கீடாக இனிப் பத்தி லொன்று தசமதசையிலே பேறென்று நாட்கடலாகத் தம்பிக் கிட்டதாகாமல் நாளைவதுவைபோலே நாளிடப் பெற்றவர் இம் மடவுலகர் கண்டதோடு பட்ட அபாந்தவாரக்ஷகாபோக்யா ஸாகாநுபாய ப்ரதிஸம்பந்தியைக் காட்டி மற்றொன்று கண்ண னல்லாலென்கிற வைகல் வாழ்தலான ஸித்தோபாயம், அதில் துர் பல புத்திகளுக்கு மாலை நண்ணி காலைமாலை விண்டு தேனைவாடா மலரிட்டு அன்பராம் ஸாங்கபக்தி, அதில் அசக்தர்க்குத் தாளடை யும் ப்ரபத்தி, அதில் அசக்தர்க்கு உச்சாரண மாத்ரம், ஸர்வோ பாய சூந்யர்க்கு இப்பத்தும் பாடியிடும் தெண்டனென்று கீதா சார்யனைப் போலே அதிகாராநுகுணம் நெறியெல்லா முரைக்கிறார் ஒன்பதாம்பத்தில்.

உஉஅ. சுரிகுழல் அஞ்சனப் புனல்மைந்நின்ற பொல்லாப்புனக் காயாவென்னும் ஆபத்திற் கொள்ளும் காமரூப கந்தரூபத்தாலே ப்ரபந்நார்த்திஹரனானவன் அருள்பெறும்போதணுகவிட்டதுக் குப் பலமான வானேறும் கதிக்கு அண்ட மூவுலகும் முன் னோடிக் கால் விழுந்திடத்தே நிழல் தடங்களாக்கி அமுதமளித்த தயரதன் பெற்ற கோவலனாகையாலே வேடன் வேடுவிச்சி பக்ஷி குரங்கு சராசரம் இடைச்சி இடையர் தயிர்த்தாழி கூனி மாலா காரர் பிணவிருந்து வேண்டடிசிலிட்டவர் அவன் மகனவன் தம்பி ஆனை அரவம் மறையாளன் பெற்றமைந்தனாகிற பதினெட்டு நாடன் பெருங்கூட்டம் நடத்து மாத்தனை வழித்துணையாக்கி அறியச் சொன்ன ஸுப்ரபாதத்தே துணைபிரியாமல் போக்கொ ழித்து மீள்கின்றதில்லையென்று நிச்சித்திருந்தவர் ஸஞ்சிதம் காட் டும் தசையானவாறே முந்துற்ற நெஞ்சுக்குப் பணிமறவாது மருளொழி நகு கைவிடேலென்று க்ருத்யாக்ருத்யங்களை விதித்து நெஞ்சுபோல்வாரைத் தொண்டீரென்றழைத்து, வலம் செய்து எண்ணுமின் பேசுமின் கேண்மின் காண்மின் நடமின் புகுது மென்று கர்த்தவ்யம் ஸ்மர்த்தவ்யம் வக்தவ்யம் ச்ரோதவ்யம் த்ரஷ்டவ்யம் கந்தவ்யம் வஸ்தவ்யமெல்லாம் வெளியிட்டுப் பிணக் கறவைச் சார்வாக நிகமித்து எண்பெருக்கிலெண்ணும் திருநாமத் தின் சப்தார்த்தங்களைச்சுருக்கி மாதவனென்று த்வயமாக்கிக் கரணத்ரயப்ரயோகவ்ருத்தி ஸம்ஸாரிகளுக்குக் கையோலைசெய்து கொடுத்துச் செஞ்சொற்கவிகளுக்குக் கள்ளவழி காவலிட்டு மனம் திருத்தி வீடு திருத்தப் போய் நாடு திருந்தினவாறே வந்து விண்ணு

லகம் தாவிரைந்து அத்தை மறந்து குடிகொண்டு தாம் புறப்பட்ட வாக்கையிலே புக்குத் தானநகர்களை அதிலே வகுத்துக் குரவை துவரைகளில் வடிவு கொண்ட சபலனுக்கு தேஹதோஷ மறிவித்து மாயையை மடித்து வானேதரக் கருதிக் கருத்தின்கண் பெரியனை வனை இன்று அஹேதுகமாக ஆதரித்த நீ அகாத்யநாதர ஹேது சொல்லென்று மடியைப் பிடிக்க, "இந்த்ரியகிங்கரராய்க் குழி தூர்த்துச் சுவைத்தகன்றீர் என்னில், அவை யாவரையும் அகற்ற நீவைத்தவை யென்பர்; அது தேஹயோகத்தாலே யென்னில்; அந்நாள் நீதந்த சுமடென்பர்; முன்செய்த முழுவினையாலே யென்னில், அது துயரமே உற்ற விருவினை உன் கோவமுமருளு மென்பர்; ஈவிலாத மதியிலே னென்னும்மதன்ரே கர்த்ருத்வ போக்த்ருத்வங்களென்னில், ஆங்காரமாய்ப் புக்குச் செய்கைப் பயனுண்பேனும் கருமமும் கருமபலனுமாகிய நீ கர்த்தா போக் தாவென்பர்; யானே என்ஞான்று மென்றத்தாலேயென்னில்; அயர்ப்பாய்ச் சமயமதி கொடுத்து உள்ளம் பேதம் செய்கை உன் தொழிலென்பர்; ஜீவப்ரக்ருதிசைதந்யம் நீங்கும் வ்ரத ஹேது; அகமேனியிலழுக்கறுக்கை அபிமாநிக்ருத்யம்; தான் நல்கும் பந்தம் நிருபாதிகம், ஸௌஹார்தம் என்ஞான்றும் நிற்கும்; பிணக்கிப் பேதியாத ஜ்ஞாநாதி வைகல்யமில்லை; ஏக மூர்த்தியில் அல்லல்மாய்த்த யத்நபலித்வங்கள் நம்மது; நாம் தனி நின்ற ஸ்வதந்த்ரரென்று அவனே அறிந்தனமே யென்னும் ஸர்வஜ்ஞ ரிவர்; நெறிகாட்டி அருகும் சுவடும் போலே இதுவும் நிருத்தர மென்று கவிழ்ந்து நிற்க, அமந்த்ரஜ்ஞோத்ஸவ கோஷம் போலே ஏறப் பெறுகிற எழுச்சியை ஸூசிப்பிக்கிற மேகஸமுத்ர பேரீகீத காஹளசங்காசீஸ்ஸ்துதி கோலாஹலம் செவிப்பட்ட வாறே ஸாக்ஷாத்கரித்த பரப்ராப்திக்குத் தலைமிசையாய் வந்த தாள் களைப் பூண்டு போகாமல் தடுத்துத் திருவாணையிட்டுக் கூசம் செய் யாத செய்திப் பிழை, பற்றுக்கொம்பற்ற கதிகேடு, போர விட்ட பெரும்பழி, புறம் போனால் வருமிழவு, உண்டிட்ட மூற்றீ ம்பு, அன்புவளர்ந்த அடியுரம்; உயிருறவு முதலளவுதுரக்கைக ளாலே பெருவாணை அல்லவாக்கின பேரவா குளப்படியாம்படி கடல் போன்ற ஆதரத்தோடே சூழ்ந்து தாபங்களை ஹரித் தமையை வெளியிடுகிருர் பத்தாம் பத்தில்.

உஉகூ. உருமையோடே உற்றேனுக்காதொழிந்தது நாடு திருந்த நச்சுப்பொய்கையாகாமைக்கு ப்ரபந்தம் தலைக் கட்ட வேர்சூடுவார் மண் பற்றுப்போலேயென்னு மவற்றிலும் இனி யினியென்று இருபதின்கால் கூப் பிடும் ஆர்த்தியதிகார பூர்த்திக்கென்னுமது முக்க்யம்.

உ௯௰, கமலக்கண்ண னென்று தொடங்கிக் கண்ணுள் நின்றிறுதி கண்டேனென்ற பத்தும் உட்கண்ணாலேயாய் காண்பானவாவுதல் அதிவிரட்டியாகையாலே கண்டு களிப்ப வளவும் பரஜ்ஞாநகர்ப்ப பரபக்தி

உ௯க. இருந்தமை யென்றது பூர்ண பரஜ்ஞாநம்.

உ௯உ. முடிந்த அவாவென்றது பரமபக்தி.

உ.௯௩. இவை ஜ்ஞாநதர்சநப்ராப்த்யவஸ்தைகள்.

உ௯௪. அவித்யாநிவர்த்தக ஜ்ஞாந பூர்த்திப்ரத பகவத்ப்ரஸாதாத் மோக்ஷலாப மென்கை மயர்வற வீடுபெற்ற வென்ற ப்ரபந்தைகார்த்த்யம்.

ஆசார்ய ஹ்ருதயம் முற்றிற்று.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்
திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்

---

(முடிவில் அநுஸந்திக்கும் தனியன்)

தந்தருளவேணும் தவத்தோர் தவப்பயனாய்
வந்த முடும்பை மணவாளா—சிந்தையினால்
நீயுரைத்த மாறன்நினைவின் பொருளனைத்தென்
வாயுரைத்து வாழும் வகை.

ஸ்ரீ

# ஆசார்யஹ்ருதய தாத்பர்ய ஸாரம்

(ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் எழுதியது.)

1. [காருணிகனுன]. அருட்கடலான எம்பெருமான், அறிவிலிகளான ஸம்ஸாரிகள் ஞான மென்னும் விளக்கை யேற்றி அகவிருள் நீங்கப் பெற்றுத் தன்னைக் கண்டு ஸதஸத்விவேகம் பண்ணுகைக்காக, ஸகல வேத காரணமாய் நித்யமாய் ஸர்வார்த்த ப்ரகாசகமாயிருக்கிற அகாரத்தில் நின்று முண்டான விளக்குப் போன்ற வேதங்களையும் அவற்றுக்கு உபப்ரும்ஹணங்களான வற்றையும் வெளியிட்டருளினன்.

2. [விவேக]. ஸதஸத்விவேகத்திற்குப் பலன் ஏதென்னில்; த்யாஜ்யங்களை விடுகையும் உபாதேயங்களைப் பற்றுகையுமேயாம்.

3. [த்யாஜ்யோபாதேய]. அனைவர்க்கும் து:க்கம் த்யாஜ்யம்; ஸுகம் உபாதேயம்.

4. [இவற்றுக்கெல்லை]. * அநந்தக்லேச பாஜநமான ஸம்ஸாரத்தில் அழுந்துகைக்கு மேற்பட்ட துக்கமில்லை; நித்யவிபூதியில் நிரந்தரம் பகவதநுபவம் பண்ணுகைக்கு மேற்பட்ட ஸுகமில்லை.

5. [அநந்தக்லேச]. கீழ்ச் சொன்ன துக்கபரமாவதிக்கு ஹேது அர்த்த பஞ்சகஜ்ஞானமில்லாமை; கீழ்ச் சொன்ன ஸுக பரமாவதிக்கு ஹேது அர்த்தபஞ்சகவுணர்ச்சி.

6. [இவற்றுக்குக் காரணம்]. அர்த்த பஞ்சகஜ்ஞானமுண்டாவதற்குக் காரணம் ஸத்வகுண ப்ராசுர்யம்; அஃது உண்டாகாமைக்குக் காரணம் ரஜஸ்தமோகுண ப்ராசுர்யம்.

7. [ஸத்வாஸத்வ]. ரஜஸ்தமோ குணங்களின் ப்ராசுர்யத்துக்குக் காரணம் இவ்விருள்தருமா ஞாலத்திற் பிறவி; ஸத்வகுண ப்ராசுர்யத்திற்குக் காரணம் ஜாயமாநகடாக்ஷம்.

8. [இவற்றுக்குமூலம்]. பிறவிக்கு மூலம் புண்ய பாபங்கள்; ஜாயமாநகடாக்ஷத்திற்கு மூலம் எம்பெருமானுடைய ஸ்வாபாவிகக்ருபையாகிற ஸுக்ருதம்.

9. [கர்மக்ருபா]. புண்யபாபரூப கருமங்களுக்குக் காரணம் அவித்யை; க்ருபைக்குக் காரணம் ஸௌஹார்தம்.

10. [ஏதந்நிமித்தம்]. அவித்யைக்கு அடி அநாதியான அசித் ஸம்பந்தம்; ஸௌஹார்தத்துக்கு அடி அத்யந்தமநாதியான நாராயண ஸம்பந்தம்.

[ஆக இவ்வளவாலும் அசித்ஸம்பந்தமடியாக அவித்யை, அதடியாகப் புண்யபாபங்கள், அவையடியாகப் பிறவி, அதடியாக ரஜஸ்தமோகுண ப்ராசுர்யம், அதடியாக அர்த்த பஞ்சகஜ்ஞானமின்மை, அதடியாக ஸம் ஸாரதுக்க முண்டாகுமென்றும், நாராயண ஸம்பந்தமடியாக அவனுடைய ஸௌஹார்தம், அதடியாக க்ருபை, அதடியாக ஜாயமாநகடாக்ஷம், அதடி யாக ஸத்வகுண ப்ராசுர்யம், அதடியாக அர்த்தபஞ்சகஜ்ஞானம், அதடியாக மோக்ஷஸுகமுண்டாகு மென்றும் சொல்லப் பட்டதாயிற்று].

11. [இவை கிட்டமும்]. கிட்டமானது தன்னோடு சேர்ந்த மாணிக்கத்தை ஒளியறததின்று உருவழித்துத் தன்னைப்போல ஆக்குமாபோலே அசித்ஸம்பந்தமானது ஒண்பொருளான ஆத்மாவை அஸத்கல்பமாக்கி ஜ்ஞானலேசமறத் தின்று ஸத்தா ஹாநியைப் பண்ணும்; வேட்டுவேளான் என்கிற குளவியானது அபதார்த்தமான வொருபுழுவைச் சுவரிலே கொண்டு வந்து வைத்து ஊதித் தன்னிறமாக்குமா போலே நாராயண ஸம்பந்த மானது பொருளல்லாததைப் பொருளாக்கி விபுக்வஸாம்யம் தந்து தன்னுக்கி ஸத்தை பெறுவிக்கும்.

12. [ஒன்று கூடினதாய்]. அசித்ஸம்பந்தம் வந்தேறி; நாரா யண ஸம்பந்தம் அநாதி.

13. [இந்தவுதரத்...]. இந்த அநாதி ஸம்பந்தமே இப்பகவான் கலைகளை வெளியிட்டமைக்கு ஹேதுவாயிற்று.

14. [வத்ஸலையான]. தாயானவள் பிள்ளை முகம் கன்றுத படிக்கு மண் தின்னவிட்டு, அதனாலுண்டான தோஷம் போகப் பிறகு மாற்றுமருந்திடுமா போலே, ஆத்மவர்க்கங்களைத்தின் திறத்திலும் தாய்போல் வத்ஸலனான எம்பெருமான் சேதந னுடைய ருசிக்குத் தக்கவாறு பந்தகங்களையங் காட்டிப் பின்னை பந்தநிவர்த்தக பேஷஜமானவற்றையும் காட்டினது பொருந்தும்.

15. [அதுதானுமாஸ்திக்ய]. ஸகலாத்மாக்களுக்கும் ஹிதத் தையே கோருமவனான எம்பெருமான் இப்படி பந்தகங்களையும் காட்டியது தானும் க்ரமத்திலே அவர்களை உஜ்ஜீவிப்பிக்கைக்கு இட்ட வழியாம்.

16. [சதுர்விதமான]. அவகாஹிக்கவரிய பல்வகைப்பட்ட அர்த்தங்களையும் அமைத்துக் கொண்டிராநின்ற சாஸ்த்ரங்களின் தாத்பர்யம் கைப்படும்படி அதிகரிப்பதற்கு- ஜம்பூத்வீபத்தின் நவமகண்டத்திற் பிறவி, மானிடப் பிறவி, சரீரஸ்தைர்யம், அதிகாரிவர்ணத்தில் உத்பத்தி இளமையின்வாய்ப்பு, நெஞ்சு இசைவு முதலானவை இன்றியமையாதனவாதலால் இவ்வளவும் பெற்று இடையூறொன்றுமின்றி சாஸ்த்ரங்களை யதிகரிப்பது அரி தென்று திருவுள்ளம்பற்றின எம்பெருமான் தன் கருணையாலே

ஸம்ஸாரிசேதநரை உஜ்ஜீவிப்பிக்கைக்காக ஸ்ரீபதரிகாச்ரமத்திலே நரநாராயணரூபேண தானே சிஷ்யனுமாய் ஆசாரியனுமாய் அவதரித்து ஸகலசாஸ்த்ரதாத்பர்யஸாரமான திருமந்த்ரத்தை வெளியிட்டருளினன்.

17. [முனிவரையிடுக்கியும்]. வ்யாஸர் முதலிய மஹர்ஷிகளுக்கு அந்தர்யாமியாயிருந்து அவர்களைக்கொண்டு வெளியிட்ட சாஸ்த்ரத்துக்கு சேதநருடைய தேஹவிசிஷ்ட வேஷத்திலே நோக்கு. [அதாவது, சாஸ்த்ரங்கள் வர்ணாச்ரம தர்மங்களைச் சொல்லுமென்கை.] தானாக நின்று வெளியிட்ட திருமந்த்ரத்துக்கு சேதநருடைய நிஷ்க்ருஷ்ட வேஷத்திலே நோக்கு. [அதாவது, திருமந்த்ரம் ஆத்மஸ்வரூபத்தை மாத்திரம் சோதிக்கத் தோன்றியதென்றபடி]

18. [தோல்புரையே]. உள்ளீதழான ஸ்வரூபத்தில் ஊற்றமின்றிக்கே மேலெழ தேஹத்திலே நோக்கான சாஸ்த்ரத்தை அதிகரிக்க ஆபிஜாத்யமாதல் ஆசாரமாதலாகிற யோக்யதை வேணும்; ஸ்வரூபஸ்பர்சியான திருமந்த்ரத்துக்கு அனைவரு மதிகாரிகள்.

19. [சாஸ்த்ரிகள்]. சாஸ்த்ரநிஷ்டரான உபாஸகர்கள்—ஆறு நீந்துவதற்குத் தெப்பத்தை ஒரு கையிலே யிடுக்கிக்கொண்டு தாங்களும் ஒருகை துழாவுகின்றவர்களைப்போன்று ஸ்வயத்நத்தையும் அதனாலாகும் பகவத் க்ருபையையும் அவலம்பித்து ஸம்ஸாரஸாகரத்தைக் கடக்க நினைப்பர்கள்; திருமந்த்ரநிஷ்டரான ப்ரபந்நர்கள்—ஓடத்தினுள்ளே இருகையும் விட்டு நிர்ப்பரராயிருப்பாரைப்போலே வைகுந்தனென்பதோர் தோணியைப்பற்றி, கேவல பகவத்க்ருபையே [அதாவது ஸ்வப்ரயத்நத்தால் விளையாத பகவத்க்ருபையே] உத்தாரகமென்று அத்யவஸித்து* கூவிக்கொள்ளுங்காலமின்னங் குறுகாதோ வென்று பகவத்ப்ராப்திகாலத்தை ப்ரதீக்ஷித்திருப்பர்கள்.

20. [இவை ஸ்வரூபத்தை]. சாஸ்த்ர நிஷ்டர்கள் ஸ்வப்ரவ்ருத்திகளிலே ஊன்றுவதற்கும் திருமந்த்ர நிஷ்டர்கள் பகவத்க்ருபையே உத்தாரகமென்று அத்யவஸித்திருப்பதற்கும் காரணம் ஏதென்னில், ஆத்மஸ்வரூபத்தைப்பற்றி அவரவர்கள் தெரிந்து கொண்டிருக்குமதுவேயாம். சாஸ்த்ரநிஷ்டர்கள் தெரிந்து கொண்டிருக்குமது எங்ஙனே யென்னில்; ஆத்மஸ்வரூபம் ஞானத்தையே குணமாகவுடைத்தாயிருக்கும்; அந்த ஞானத்தாலே எங்கும் வியாபித்து தேஹத்திற் காட்டில் விலக்ஷணமாய் கர்த்ருத்வ போக்த்ருத்வ யுக்தமாய் பகவானுக்கு சேஷமாயிருக்குமென்று. இனி திருமந்த்ரநிஷ்டர்கள் தெரிந்துகொண்டிருக்குமது எங்ஙனே

யென்னில் ; எம்பெருமானைத் தவிர்ந்த தெல்லாமும் ஹேயமென்னு மறிவைப்பெறும்படி நிர்ஹேதுகமாக எம்பெருமான் நடத்த அதனாலே ஆத்மஸ்வரூபத்தை தேஹாதிவிலக்ஷணமாய் ஜ்ஞாத்ருத் வாதிகுணகமாய் பாகவத சேஷத்வபர்யந்த பகவச் சேஷத்வமே வடிவாய் பாரதந்த்ர்ய போக்யதைகளையே ஸ்வரூபமாக வுடைத்தா யிருக்குமதாக. இப்படிப்பட்ட உணர்ச்சியின் வாசியினாலேயே சாஸ்த்ரநிஷ்டர்கள் ஸ்வயத்நத்தாலே பிறவிக்கடலை நீந்த நினைப்ப தும் ஸாரநிஷ்டர்கள் தங்கள் பாரத்தை அவன்மேலே போகட்டு ஸ்வயத்நரஹிதராயிருக்கையும் ப்ராப்தமாகிறது.

21. [சேஷத்வபோக்...]. சாஸ்த்ரமுகத்தாலே ஸ்வரூபத்தை அறியுமளவில் பகவச்சேஷத்வமும் பகவதநுபவபோக்த்ருத்வ மூமே ப்ரகாசிக்கும். சாஸ்த்ரதாத்பர்யமான திருமந்த்ரத்தினுட்புக் கால் பாரதந்த்ர்யமும் போக்யதையுமாகிற ஸ்வரூப யாதாத்மியம் ப்ரகாசிக்கும். இவற்றில் சேஷத்வத்திற் காட்டில் பாரதந்த்ர்யம் மிகச் சிறந்ததாகும். எதனாலென்னில், இஷ்ட விநியோகத்திறகு போக்யமாயிருக்குமளவே சேஷத்வமாகும். அவ்வளவேயல்லா மல் இவ்வஸ்துவை சேஷிக்கு இஷ்டமானபடி விநியோகப்படுத்திக் கொடுக்கும் பாரதந்த்ர்யம். ஆகவே ஸ்வரூப யோக்யதாமாத்ர ரூபமான சேஷத்வத்திற் காட்டில் பலோபதாநரூபமான பாரதந் த்ர்யம் சிறந்ததே. இனி, போகத்தில் ஸ்வார்த்ததத்வபுத்திக்கு ஹேது வான போக்த்ருத்வத்திற் காட்டில் அந்த போக்த்ருத்வத்தை சேஷியி னுடைய உகப்புக்கு உறுப்பாக்கிக் கொடுக்கிற போக்யதை சிறந்த தாயிருக்கும்.

22. [ஜ்ஞாந சதுர்த்திகளின்]. சேஷத்வம் பாரதந்த்ர்யம் போக்த் ருத்வம் போக்யதை என்ற நான்கினுள் சேஷத்வமும் போக்த்ருத் வமும் தாழ்ந்தவை யென்றும், பாரதந்த்ர்யமும் போக்யதையும் உயர்ந்தவை யென்றும் நிஷ்கர்ஷிப்பதற்குத் திருமந்த்ரத்தில் என்ன கமக முளதென்னில், அது நிரூபிக்கப்படுகிறது. திருமந் த்ரத்தில் சேஷத்வம் தோன்றின பின்பும் அதற்கு ஒரு விரோதி தோன்றி அதைக் களைய வேண்டியதாயிற்று. அப்படியே அதில் போக்த்ருத்வம் தோன்றின பின்பும் அதற்கொரு விரோதி தோன்றி அதைக் களையவேண்டியதாயிற்று. பாரதந்த்ர்யம் தோன்றின பின்பு அதற்கு ஒரு விரோதியும் தோன்றிற்றில்லை ; அதைக் களைய வேண்டிய ப்ரஸக்தியுமில்லை யாயிற்று. போக்யதை தோன்றின பின்பு அதற்குமொரு விரோதி தோன்றிற்றில்லை, அதைக் களைய ப்ரஸக்தியு முண்டாயிற்றில்லை. ஆக, மேலே விரோதி தோன்றும்படியாக நிற்கிற சேஷத்வ போக்த்ருத்வங் களிற் காட்டிலும் விரோதி தோன்றப் பெறாத பாரதந்த்ர்ய போக்

யதைகளே மேலானவை யென்னத்தட்டில்லை. இரண்டுக்கு விரோதிகள் தோன்றினதாகவும் அவை களையப் பட்டதாகவும் சொன்னது இனி விவரிக்கப்படுகிறது. ப்ரணவத்தில் மூன்ருவது அக்ஷரமான மகாரமானது ஆத்மாவைச் சொல்லுகிறது. மந ஜ்ஞாநே என்கிற தாதுவடியாக மகாரம் தோன்றிற்ருதலால் ஆத்மா ஜ்ஞாதா வென்று சொல்லிற்ருகிறது. ஜ்ஞாதாவான போதே கர்த்தாவுமாய் போக்தாவு மாயிற்று. இந்த போக்த்ருத்வமானது அந்த போகத்திலே ஸ்வார்த்தத்வமாகிற கல்மஷத்தின் உதயத்தை [தான் அநுபவித்துத் தான் ஆனந்தப்படுவதாகிற விரோதியை] ஸஹித்திருந்த படியால்தான் மேலே நம: என்று அந்த விரோதியைக் களைய நேர்ந்தது. ஆகவே, போக்த்ருத்வமானது மேலெழுந்தான ஸாமாந்யதர்ம மென்றும், போக்யதை யானது வடிக்கட்டி யெடுக்கப்பட்ட ஸாரமான தர்மமென்றும் தேறிற்று. இப்படியே சேஷத்வத்திற்காட்டிலும் பாரதந்த்ர்யமே ஸாரமென்பதும் தேறும்; எங்ஙனே யென்னில்; ப்ரணவத்தில் "இதிலே சதுர்த்தி ஏறிக்கழியும்" என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியின் படியே அகாரத்தின்மேல் ஏறிக் கழிந்ததான [லுப்த] சதுர்த்தியிலாயிற்று சேஷத்வம் தோன்றி யிருக்கிறது; இது தோன்றியிருக்கச் செய்தேயும், தன்னைத்தானே ரக்ஷித்துக் கொள்வதில் முயற்சி செய்தற்கு ஹேதுவான ஸ்வாதந்த்ர்யத்தைக் காட்டுகிற ம: என்கிற ஷஷ்டி ஏற்பட்டு அப்படிப்பட்ட ஸ்வாதந்த்ர்யத்தை ந என்று கழிக்க வேண்டியதாயிற்று. அது கழிந்தே பாரதந்த்ர்யம் ப்ரகாசித்தது. ஆக, சேஷத்வம் மாத்திரம் தோன்றினல் அதன் மேல் ஒரு விரோதி யுண்டாகி அதனைப் பாரதந்த்ர்ய வேஷத்தினல் கழிக்கவேண்டியும், போக்த்ருத்வம் தோன்றினல் அதன் மேல் தானனந்தப் படுவதாகிற வொரு விரோதி யுண்டாகி அதனை போக்யதா வேஷத்தினல் கழிக்க வேண்டியும் நேர்ந்தபடியாலே விரோதியின் உத்பத்தியை ஸஹிக்குமவை ஜ்ஞாத்ருத்வ போக்த்ருத்வங்கள் என்று ஸ்பஷ்டமாக அறியலாயிற்று. பாரதந்த்ர்யமும் போக்யதையும் ஸித்தித்தபின்பு அவற்றின்மேல் ஒரு விரோதியும் தோன்றவு மில்லை, அது கழிக்கப்படவு மில்லை; ஆகவே அவை விரோதியின் உத்பத்தியை ஸஹியாதவை யென்ற காரணத்தினல் சிறந்தவையாயின. சேஷத்வ போக்த்ருத்வங்கள் வடிக்கட்ட வேண்டிய நிலைமைகளென்றும், பாரதந்த்ர்ய போக்யதைகள் வடிக்கட்டியான நிலைமைகளென்றும் தேறிற்று.

[இப்படி உத்க்ருஷ்டமான பாரதந்த்ர்ய போக்யதைகளை ஆத்மாவுக்கு வடிவாக ஸாரஜ்ஞரான திருமந்த்ர நிஷ்டர் உணர்ந்தமையால் அவர்களுக்கு ஸ்வயத்நராஹித்ய முண்டாயிற்று. இங்ஙனன்றியே கீழ்ப்படியான சேஷத்வ போக்த்ருத்வங்களை ஆத்மாவுக்கு வடிவாக சாஸ்த்ரிகள் உணர்ந்த

மையாலே அவர்களுக்கு ஸ்வப்ரயத்நபரத்வ முண்டாயிற்று என்று நிகமித்துக்கொள்க.]

23. [மூன்றுக்தெழுந்த]. ஸ்வப்ரயத்நலவலேசத்தையும் ஸ்வப்ர யோஜந லவலேசத்தையும் ஸஹியாதவையாய் எம்பெருமா னுடைய போகத்திற்கு மிகவும் பாங்காயிருந்து கொண்டு ஸ்வ ரூபத்தை நிறம் பெறுவிக்கு மவையான பாரதந்த்ர்யமும் போக் யதையும் கீழ்ச்சொன்ன தன்மைகளில்லாத சேஷத்வத்தையும் போக்த்ருத்வத்தையும் கீழ்ப்படுத்தித தாமே மேலாயிருக்கும்.

[இந்த சூர்ணையில் ப்ரதமம் மத்யமம் சரமம் என மூன்று பதங்கள் உள்ளன; திருமந்த்ரத்தில் முதல் அக்ஷரத்தில் லுப்தசதுர்த்தியிலே தோன்றின சேஷத்வம் ப்ரதமதசை; பிறகு அந்த சேஷத்வத்திற்கு ஆச்ரயத்தைச் சொல்லுமதான மகாரத்தில் தோன்றின ஜ்ஞாத்ருத்வ பலப்ராப்தமான போக்த்ருத்வம் மத்யமதசை; அதன்மேல் நம: பத நாராயணாயபதங்களில் விளங்கின பாரதந்த்ர்யமும் போக்யதையும் சரமம். சரமமானவிவை ப்ரதம மத்யமதசைகளான சேஷத்வ போக்த்ருத்வங் களைப் பகல விளக்குப் போலே பயனற்றதாகவும் மின்மினிப் பூச்சி போலே அற்பமான வொளியையுடையதாகவும் பண்ணுமென்றதாயிற்று.]

24. [நாலிலொன்று]. கீழே ப்ரவ்ருத்தி பரராகச் சொல்லப் பட்ட சாஸ்திரிகளுக்கும், நிவ்ருத்திபரராகச் சொல்லப்பட்ட ஸாரஜ்ஞர்களுக்கும் அந்த ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு ஹேதுக் கள் எவை யென்னில்; சேஷத்வ போக்த்ருத்வங்கள் பாரதந்த்ர்ய போக்யதைகள் என்கிற நான்கினுள் சேஷத்வ போக்த்ருத்வங் களே ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்று கண்ட சாஸ்த்ரநிஷ்டர்களை, போக்த்ருத்வமானது 'போக்யவஸ்து கிடைப்பதற்கு போக்தா வானவன் முயற்சி செய்யவேண்டாவோ?' என்னும் நினைவாலே போக்யபூதமான பகவத் விஷயத்தின் லாபத்திற்கு உறுப்பான உபாயப்ரவ்ருத்தியிலே கொண்டுமூட்டும்; பாரதந்த்ர்ய போக் யதைகளையே ஸ்வரூபவுண்மைவடிவென்று கண்ட ஸாரஜ்ஞர் களாகிய திருமந்த்ரநிஷ்டர்களை போக்யதையானது 'போக்தா வான எம்பெருமானன்றோ தனக்கு போக்யமான இவ்வாத்ம வஸ்துவைப் பெறுகைக்கு முயற்சி பண்ணுவான்; அப்பெருமா னுக்கு போக்கியமாயிருக்குமிவ் வாத்மவஸ்துவுக்கு அவனைப் பெறுவதற்கான முயற்சிகளைச் செய்ய அதிகாரமில்லை' என்னும் நினைவாலே உபாய ப்ரவ்ருத்தியில் நின்றும் மீள்விக்கும். (அதாவது) நிவ்ருத்தியிலே மூட்டும்.

[சேஷத்வ போக்த்ருத்வ பாரதந்த்ர்ய போக்யதைகளாகிற நாலில் ஒன்றான போக்த்ருத்வமானது சாஸ்த்ரிகளை உபாயாநுஷ்டானத்திலே ப்ரவர்த்திப்பிக்கும்; போக்யதையாகிற மற்றொன்று ஸாரஜ்ஞரை உபாயாநுஷ்டானத்தில் நின்றும் நிவர்த்திப்பிக்கும் என்றதாயிற்று.]

25. [முற்பாடர்க்கு]. (திருமந்த்ரநிஷ்டர்களுக்கும் சேஷத்வ போக்த்ருத்வங்களுண்டே; அவர்களிடத்தில் அவை எப்படியிருக்குமென்னில், அது சொல்லுகிறது இதில்.) சாஸ்த்ரிகளென்று முற்படச் சொல்லப்பட்ட உபாஸகர்களுக்குக் கருமத்திற்கு அங்கமாகவுள்ள அவையிரண்டும் "செயல்தீரச் சிந்தித்து வாழ்வாரே வாழ்வார்" என்கிற திருமழிசைப் பிரானருளிச் செயலின்படியே 'இவ்வாத்மா செய்யக் கடவதொன்றுமில்லை, எம்பெருமானே நிர்வாஹகன்' என்று அநுஸந்தித்து உபாயாநுஷ்டானமாகிய ப்ரவ்ருத்தியில் நின்றும் நிவ்ருத்தரான [ஸாரஜ்ஞர்களான] ப்ரபந்நருடைய கைங்கர்யமாகிற வ்ருத்தியில் எம்பெருமானுகப்பைப் பின் செல்லுமது தவிர, தம் நிர்ப்பந்தத்தைக் காட்டிக்கொள்ள மாட்டா.

26. [கர்ம கைங்கர்யங்கள்]. கீழ்ச் சூர்ணிகையில் க்ரியா என்னும் சப்தத்தால் சொன்ன கர்மமும், வ்ருத்தி என்னும் சப்தத்தால் சொன்ன கைங்கர்யமும் முறையே சாஸ்த்ரஜ்ஞர்களுடையவும் ஸாரஜ்ஞர்களுடையவும் எந்த அம்சத்திற்கு ஏற்றிருக்குமென்னில்; கர்மாநுஷ்டானமானது அஸத்யமுமாய் அநித்யமுமான வருணத்திற்கு [-ஜாதிக்கு] ஏற்றிருக்கும். கைங்கர்யமானது ஸத்யமுமாய் நித்யமுமான அடிமைக்கு ஏற்றிருக்கும்.

[வருணத்தை அஸத்யமென்றும் அநித்யமென்றும் பேசுவது ஏனென்னில்; அது ஆத்மாவுக்கு ஏற்பட்ட வடிவன்றே. வந்தேறியான தேஹத்தளவிலே நின்று அந்த தேஹத்தோடு கூடவே கழிந்து போவதன்றோ வருணமென்பது. ஆகவே அதனை அஸத்யமென்றும் அநித்யமென்றும் சொல்லக்குறையில்லை. அடிமையென்பது அப்படிப்பட்டதன்று; "திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்" என்கிறபடியே அது ஆத்மாவுக்கே ஏற்பட்ட வடிவாகி ஆத்மாவுள்ளளவும் தொடருகையாலே அது ஸத்யமும் நித்யமுமாகப் பேசப்பட்டது.]

27. [இவற்றுக்கு விதிராகங்கள்] வேதங்களில் "யஜேத" என்றும் "ஜுஹுயாத்" என்றுமுள்ள விதிகள் கர்மத்தை ப்ரேரிக்கின்றன. கைங்கர்யம் அப்படி விதியினால் விளைவதன்று. "உகந்து பணி செய்து" என்று அருளிச்செய்கையாலே அநுராகமே கைங்கர்யத்தை ப்ரேரிக்கின்றது.

28. [மண்டினரும்]. "கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை யென்று மண்டினார்" என்று உகந்தருளின நிலங்களென்னும் திருப்பதிகளிலே மிகவும் ஊற்றமுடையாரான ப்ரபந்நர் கைங்கரியத்திற்கு ஆச்ரயபூதர். அந்தப் பாசுரத்திலேயே "மற்றையார்க்கு உய்யலாமே" என்று மற்றையாராகச் சொல்லப்பட்ட உபாஸகர் கர்மத்திற்கு ஆச்ரயபூதர்.

29. [அருள்முடியநிறுத்தி]. அவரவர்கள் ஏதேனும் தேவதைகளை ஆச்ரயித்துப் பெற நினைக்கும் பேறுகள் எம்பெருமான் தன்னுடைய அநுக்ரஹத்தாலே தேறுகின்றன என்னும்படி, தனக்குச் சரீரபூதர்களான தேவதைகளை நிறுத்தி அவர்களுக்கு அந்தர்யாமியாய் நின்றவிடம் கர்மத்திற்கு இலக்கு. அங்ஙனன்றியே "நல்லதோரருள் தன்னாலே காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்குய்யும்வண்ணம்" என்றும், "கருத்துக்கு நன்று மெளியனாய்" என்றும் சொல்லுகிறபடியே கேவலம் தன் கருணையாலே மிகவும் எளியனாய்க்கொண்டு அர்ச்சாவதாரமாய் நிற்கிறவிடமே கைங்கர்யத்திற்கு இலக்கு.

[கர்மானுஷ்டானங்களில் அக்நி, இந்திரன், ஸோமன், வருணன், ப்ரஜாபதி, பசுபதி, ப்ருஹஸ்பதி—என்கிற தேவதைகளின் பெயர் பலகாலும் வரும். அந்தத் தேவதைகளை நோக்கி வழிபாடுகள் செய்யப்படும். ஆனால் அந்த ஆராதனைகள் அந்தத் தேவதைகளுக்கு அந்தர்யாமியான எம்பெருமானிடமே போய்ச்சேருகின்றன வென்பது வேதாந்திகளின் ஸித்தாந்தம். ஆனதுபற்றியே, கர்மங்களுக்கு தேவதாந்தர்யாமி பகவான் இலக்கானவன் என்றது.]

30. [இவற்றாலே]. இப்படி தேவதாந்தர்யாமியையும் அர்ச்சாவதாரத்தையும் விஷயமாகவுடைய இத்தன்மைகளாலே, ஸாதாரண விக்ரஹ விசிஷ்டனை விஷயமாகவுடைய கர்மம் ஸாதாரணமென்றும், அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனை விஷயமாக உடைய கைங்கர்யம் அஸாதாரண மென்றும் சொல்லப்படும்.

31. [ஜாத்யாச்ரம]. ப்ராஹ்மணாதி ஜாதிகளிலும் ப்ரஹ்மசர்யம் முதலிய ஆச்ரமங்களிலும் ஜ்யோதிஷ்டோமாதி தீக்ஷைகளிலும் தர்மம் பேதிக்குமாபோலே, அத்தாணிச் சேவகமென்கிற அந்தரங்கஸேவையாகிற கைங்கர்யத்திலே அதிகரித்தவர்களுக்கு, தேவதாந்தர்யாமி விஷயமாய் தச்சரீர பூததேவதாத்வாரா ததாராதநமாகையாலே ஸாதாரணமாயிருந்துள்ள கர்மம் உறங்குவான் கைப்பண்டம் போலே தன்னடையே நழுவும்.

32. [ஸாதநஸாத்யங்களில்]. ஸாதநத்தில் முதலடியான கர்மமும், ஸாத்யத்தின் சரமாவதியான கைங்கர்யமும் இந்ததாரதம்ய மறிந்தவர்களை "நீங்கள் வர்ணதர்ம நிஷ்டர்கள், நாங்கள் தாஸவ்ருத்தி நிஷ்டர்கள்" என்று உறவறுத்துத் துறைவேறிட்டுப் போகப் பண்ணிற்று. [இங்கு வில்லிபுத்தூர் பகவர் வ்ருத்தாந்தத்தை ஸ்மரிப்பது. திருவயிந்திரபுரத்தில் துறை வேறிட்ட ஐதிஹ்யம்.]

33. [வேதவித்துக்களும்]. வேதவித்துக்களான பூர்வபாக நிஷ்டர்கள் காயத்திரியின் உபதேசத்தாலே பிறப்பிக்குமது கர்மநிஷ்டர்க்கு ச்ரேஷ்டமான ஜந்மம்; வேததாத்பர்ய வித்துக்கள்

திருமந்த்ரோபதேசத்தாலே பிறப்பிக்குமது கைங்கர்யநிஷ்டர்க்கு ச்ரேஷ்டமான ஜந்மம்.

34 [அந்தணர்மறையோர்]. விசேஷணபூத சரீரத்வாராவந்த வருணமும், தத்ப்ரயுக்தமான வைதிகத்வமும் கர்மடர்களுக்கு நிரூபகம்; ஆத்மவஸ்துவுக்கு அந்தரங்க நிரூபகமான சேஷத்வமும், தத்ப்ரயுக்த கிஞ்சித்கரத்வமும் ப்ரபன்னர்க்கு நிரூபகம்.

35. [ஒருதலையில்]. கர்மநிஷ்டரென்று சொல்லப்பட்டவொரு தலையில் சரீரானுபந்திகளான க்ராமகுலாதிகளையிட்டு வழங்குமந்த வ்யபதேசத்தை கைங்கர்ய நிஷ்டரான மற்றைத் தலையிலுள்ளவர்கள், திருமந்த்ரஸித்த பகவத்ஸம்பந்தஜ்ஞாநப்ரயுக்தமாய்-சேஷத்வவிரோதியான அஹங்காராதிகளில்லாமையாலே நிர்தோஷமாயிருக்கிற இக்குலத்துக்கு அவத்ய மென்று கருதி, "வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்" என்றும், "கோயிலில் வாழும் வைட்டணவன்" என்றும் பகவதந்வயமுள்ள தேசஸம்பந்தத்தையிட்டு வ்யவஹரிப்பர்கள்.

36. [விப்ரர்க்கு]. ப்ராஹ்மணர்க்கு கோத்ர கூடஸ்தர் பராசராதிகள்; சரண கூடஸ்தர் பாராசர்யாதிகள்; ஸூத்ர கூடஸ்தர் போதாயநாதிகள். ப்ரபன்ன ஜநங்களுக்குக் கூடஸ்தர் நம்மாழ்வார் திருமங்கை யாழ்வார் தொடக்கமான ஆழ்வார்களும், எம்பெருமானார் முதலான ஆசார்யர்களும்.

37. [அத்யயநஜ்ஞாநாநு]. முதலிலே வேதத்தை ஆசார்யோச்சாரணாநுச்சாரணமுகேந அக்ஷரராசிக்ரஹணம் பண்ணுகையாகிற அத்யயநத்தைப் பண்ணி மீமாம்ஸாச்ரவணாதிகளாலே வேதார்த்தமறிந்து ததநுரூபமான அநுஷ்டானமுண்டானால்ப்ராஹ்மண்யம் ஸித்திக்குமாபோலே, திருவாய் மொழியை ஆசார்யமுகேந ஓதி உபதேச முகத்தாலே அதன் பொருளையறியப் பெற்று அதற்குத் தக்கவாறு அனுஷ்டிக்கவும் வல்லரானாலாய்த்து வைஷ்ணவத்வம் ஸித்திப்பது.

38. [இந்நூவுட்பொருள் கற்று]. வேதமோதுகைக்கு ப்ரயோஜநம் ஈச்வரனை யுள்ளபடி அறிந்து 'ஸ்வரூபாநுரூபமானபுருஷார்த்தம் கைங்கர்யம்?' என்று அத்யவஸிக்கையாகையாலே இப்படிப்பட்ட ஜ்ஞாநமில்லாமல் நான்கு வேதங்களையு மதிகரித்தவர்களாயினும் அந்த வேதத்தோடு தங்களுக்கு ஸம்பந்தமின்றி அதுக்கு அசலானவர்களென்றறுதியிடப்பட்டு "விஷ்ணுபக்தி விஹீநோ யஸ் ஸர்வ சாஸ்த்ரார்த்த வேத்யபி! ப்ராஹ்மண்யம் தஸ்ய ந பவேத் தஸ்யோத்பத்திர் நிரூப்யதாம்" என்று—இவர்கள் ப்ராஹ்மணரல்ல ரென்று உத்பத்தி ஆராயப்படும்.

39. [எவ்வுலகத்தெவ்]. "ஓதுவாரோத்தெல்லா மெவ்வுலகத் தெவ்வெவையும்" என்கையாலே வேதமானது ஓதுமவர்களுடைய பேதத்தாலும் லோகபேதத்தாலும் பஹுவிதமாயிருக்கும்.

40. [அதில் ஸம்ஸ்க்ருதம்]. இப்படி பஹுவிதமான வேதத்தில் ஸம்ஸ்க்ருதவேதம், த்ராவிடவேதமென்கிற பிரிவு—ஸம்ஸ்க்ருதாம்சந்தன்னில் ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் அதர்வண வேதம் என்கிற பிரிவுபோலே.

[வேதராசி ஒன்றாயிருக்கச்செய்தே ஸம்ஸ்க்ருத பாஷாரூபமானவதுதன்னிலே ருக்வேதமென்றும் யஜுர்வேதமென்றும் பலபடியாகப் பிரிந்தாப்போலே பாஷாபேதத்தாலுமிப்படி பிரிந்திருக்குமென்றபடி.]

41. [செந்திறத்த]. "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி" என்று ஸம்ஸ்க்ருதத்தோடே ஸஹபடிதமும் ப்ரதமோக்தமுமாகையாலே — அகஸ்த்யப்ரகாசிதமானமாத்ரம் கொண்டு ஆகஸ்த்யமென்னப்படுகிற த்ராவிடமும் அநாதியாயுள்ளதாம்.

42. [வடமொழிமறை]. 'மறை' என்று இவ்வளவே சொல்லவமைந்திருக்க "வடமொழிமறை" என்று விசேஷித்து ஸம்ஸ்க்ருத வேதமென்றது-த்ராவிடவேதமு முண்டென்று நினைத்தன்றோ. [ப்ரதிகோடியில்லாதபோது இப்படி விசேஷிக்க வேண்டாவே.]

43. [வேதசதுஷ்டயாங்க]. ருக்வேதம் முதலிய நான்குக்கும் சிக்ஷா, வ்யாகரணம், நிருக்தம், சந்தஸ், கல்பம், ஜ்யோதிஷம் ஆகிற ஆறங்கங்களும், மீமாம்ஸாந்யாயபுராண தர்மசாஸ்த்ராதிகளான உபாங்கங்களெட்டுமாயிருந்துள்ள பதினாலும்போலே, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழியாகிற இந்த த்ராவிட வேதங்கள் நான்குக்கும் திருமங்கையாழ்வாருடைய திவ்ய ப்ரபந்தங்களாறும், மற்றையாழ்வார்கள் எண்மருடைய விலக்ஷண ப்ரபந்தங்களும் அங்கோபாங்கங்களாம்.

44. [ஸகல வித்யாதிக]. வேதமானது தனது அங்கோபாங்கங்களான ஸகலவித்யைகளிற் காட்டிலும் தனக்குண்டான வைபவத்தாலே மேன்மைபெற்றாப்போலே, நம்மாழ்வாருடைய நான்கு திவ்ய ப்ரபந்தமும் தம் அங்கோபாங்கங்களான மற்றெல்லா ப்ரபந்தங்களிற் காட்டிலும் ஸ்வவைபவத்தாலே மேலாயிருக்கும்.

45. [வேதநூல்]. "வேதநூல் பிராயம்" என்று அத்தை வேதசாஸ்த்ரமென்றாப்போலே இத்தையும் "இருந்தமிழ் நூல்' என்று பெரிய த்ராவிட சாஸ்த்ரமென்கையாலும், அத்தை "ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா" என்று பகவதாஜ்ஞா ரூபமாகச் சொன்னாப்போலே, இத்தையும் "ஆணையாயிரம்" என்று அப்

படியே சொல்லுகையாலும், அத்தை "வசையில் நான்மறை" என்று விப்ரலம்பாதி தோஷரஹித மென்றுப்போலே, இத்தையும் "ஏதமிலாயிரம்" என்று நிர்தோஷமாகச் சொல்லுகையாலும், அத்தை "சுடர் மிகு சுருதி" என்று 'ச்ரூயத இதி ச்ருதி:' என்கிற படியே பூர்வபூர்வோச்சாரண க்ரமத்திலே ச்ரவணேந்த்ரியத்தாலே க்ரஹிக்கப்படுமதாகச் சொன்னுப்போலே இத்தையும் "செவிக்கினிய செஞ்சொல்" என்று ச்ராவ்யமாகச் சொல்லுகையாலும், அத்தை "வேதநூலோதுகின்றதுண்மை யல்லதில்லை" என்று ஸத்யவாதியென்றுப்போலே, இத்தையும் "பொய்யில் பாடலாயிரம்" என்று அஸத்ய கந்தரஹிதமென்கையாலும், அத்தை "பண்டை நான்மறை" என்று அநாதியாகவும், 'நிற்கும் நான்மறை" என்று மேலழிவில்லாததாகவும் சொன்னுப்போலே, இத்தையும் "முந்தையாயிரம்", "அழிவில்லாவாயிரம்" என்று அவ்வண்ணமாகவே சொல்லுகையாலும் இந்த லக்ஷணங்களெல்லாம் இரண்டுக்கு மொக்குமென்றுணரத்தக்கது.

46. [சொல்லப்பட்டவென்ற]. "குருகூர்ச் சடகோபன் சொல்லப்பட்ட வாயிரம்" என்று திருவாய் மொழியில் ஆழ்வார்க்குச் சொன்ன கர்த்ருத்வம் "அநாதிநிதநா ஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா" என்று-ஸ்ம்ருதி அந்த வேதத்தை ப்ரஹ்மா ஸ்ருஷ்டித்தானென்றுப் போலே; [அநாதி நிதநமான ஸந்தர்ப்பம் ப்ரஹ்மாவின் வாக்கில் நின்று மாவிர்ப்பவித்த மாத்திரம் கொண்டு ப்ரஹ்மாவுக்கு அதில் சொன்ன கர்த்ருத்வம் போலே இதிலுமாழ்வார்க்குச் சொன்ன கர்த்ருத்வம் ப்ரகாசகத்வ ப்ரயுக்த மாகையாலே, இத்தால் இதினுடைய நித்யத்வ அபௌருஷேயத்வங்களுக்கு ஹாநிவாரா தென்கை.]

47. [நால்வேதங்கண்ட]. நாலு வேதங்களையும் ஸாக்ஷாத்கரித்த புராணகர்த்தாவான ஸ்ரீ வேதவ்யாஸ பகவான் வேதாதிகளின் முன்னைய ஆநுபூர்வியை தர்சித்துச் சொன்னபடியாலே, "தர்சநாத் ருஷி:, மநநசீலோ முநி:, கவி: க்ராந்ததர்சீ" என்கிற அர்த்தங்களை நினைத்துக் கொண்டு, "ருஷேஸ் தஸ்ய மஹாத்மந:" என்றும், "வ்யாஸரூபீ மஹாமுநி:" என்றும், "கவிமுக்ய: பாராசர்ய:" என்றும் அவரை ருஷிமுநிகவி யென்றுப் போலவும், மந்த்ரதர்சிகளானவர்களை பூர்வஸித்த ஸந்தர்ப்பத்தை ஸாக்ஷாத் கரித்துச் சொன்னவர்களென்னு மிடம் தோற்ற "நமருஷிப்யோ மந்த்ரக்ருத்ப்ய:" என்றும், "பகவாந் சௌநகமுநி:" என்றுமித்யாதிகளாலே ருஷிமுநி யென்றுப் போலவும், த்ராவிட வேதமான விதின் பூர்வஸித்த ஆநு பூர்வியை ஸாக்ஷாத்கரித்துப் பேசின இவ்வாழ்வாரையும், "ருஷிம் ஜுஷாமஹே" என்றும், "சடகோப முநிம் வந்தே" என்றும், "உலகம் படைத்தான் கவியாயி

னேற்கு" என்றும்—முன்புண்டான ஸந்தர்ப்பத்தை தர்சித்துப் பேசினவரென்னுமிடம் தோற்ற ருஷி யென்றும் முநியென்றும் கவி யென்றும் சொல்லா நிற்கும்.

48. [படைத்தான்கவி]. 'ப்ரளயம் கொண்ட வுலகத்தை முன்பு போல ஸ்ருஷ்டித்த ஈச்வரனுடைய கவி நான்' என்னுமர்த்தம் தோற்ற "ஒன்றியொன்றியுலகம் படைத்தான் கவியாயினேற்கு" என்று ஆழ்வார்தாம் அருளிச் செய்த பாசுரத்தை நோக்குமிடத்து—ஸ்ருஷ்டிதோறும் சந்த்ர ஸூர்யாதிஸகலபதார்த்தங்களும் யதாபூர்வகல்பநமாய் வருமாபோலே இந்தத்ராவிடவேதமும் ஸ்ருஷ்டிதோறும் யதாபூர்வ கல்பநமாய் வருமென்று தோற்று மாயிற்று.

49. [உறக்கம்தலைக்கொண்ட]. ஸம்ஹாரஸமயத்தில் நாமரூப விபாகாநர்ஹமாய் ஸதவஸ்தமாய்க் கிடந்தவித்தை ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே விபக்தமாக்கி மஹதாதிஸகலதத்வங்களையும் அண்டத்தையும் ஸ்ருஷ்டித்து சதுர்முகஸ்ருஷ்டிக்கு முன்னாக, ஏகார்ணவத்திலே "இவை நல்வழியாய்க் கரைசேரும் விரகு ஏதோ" என்று அநுஸந்திக்கையாகிற யோக நித்ரையைச் செய்தபின்பு, ஸுப்தப்ரபுத்த ந்யாயத்தாலே ஸம்ஸ்காரகதமாய்க் கிடந்த நாலு வேதங்களையும் ஆநுபூர்விதப்பாமல் ஸ்மரித்த தன் தகப்பனை ஸர்வேச்வரன் பக்கலில் அவ் வேதங்களை ஓதின சதுர்முகன், நித்ய ஸ்நாந, உபவீதக்ருஷ்ணாஜிநதாரண, பிக்ஷாந்ந போஜந, இந்த்ரிய ஜய, ஸதா அத்யயநபரத்வங்களான ப்ரஹ்மசர்யலக்ஷணங்களோடே கூடினவனாய்த் தனக்கு ஜ்யேஷ்ட புத்ரனை ருத்ரன் முதலானார்க்கு அந்த வேதத்தை ஓதுவித்தாப் போலே, ஸம்ஹார காலத்தில் நாமரூபங்களை இழந்தாப்போலே ஸத்தையையுமிழந்து போகாமல், எந்தையர்ன முறையாலே தன்மேலே ஏறிட்டுக் கொண்டு நோக்கி மீண்டும் கரணகளேபரங்களைத் தந்து ஜ்ஞாந விகாஸத்தைப் பண்ணின ஆதிபகவான் தானே ஆழ்வார்க்கு ப்ரஹ்ம குருவாய் இரவும் பகலும் முன்னுருச் சொல்ல, ஆழ்வாரும் அநூச்சாரணம் பண்ண, இப்படி அவன்பக்கல் ஓதின இவ் வாழ்வாரும் தம் பக்கலில் க்ருதஜ்ஞரான மதுரகவிகள் போல்வாரை அப்யஸிப்பிக்க, வேதமானது தன்னையோதுமவர்களையிட்டு நிரூபிக்கப் படுமதாகையாலே "ஆதர்வணம், காண்வம், தைத்திரீயம்" என்று பேர் பெற்றாப்போலே, ஆழ்வார் இந்தத்ராவிட வேதத்துக்கு முதன்மையான அத்யேதாவானது பற்றி இதுவும் "சடகோபன்சொல்" என்று பேர்பெற்றது.

[ஆக, முப்பத்தேழாவது சூர்ணையில் ப்ரஸ்துதமான திருவாய்மொழியின் வேதத்வம் இவ்வளவும் வர ஸாதிக்கப்பட்டது.]

50. [இயற்பா மூன்றும்]. நம்மாழ்வாருடைய ப்ரபந்தங்கள் நான்கினுள்ளும இயற்பாவென்னு மாயிரத்திற் சேர்ந்த மூன்றில் முதலதான திருவிருத்தம் ருக்வேத ஸ்தாநீயம் ; இரண்டாவதான திருவாசிரியம், யஜுர்வேத ஸ்தாநீயம், மூன்றாவதான பெரிய திருவந்தாதி அதர்வணவேத ஸ்தாநீயம். சரம ப்ரபந்தமான திருவாய்மொழி ஸாமவேத ஸ்தாநீயம்.

51. [ருக்கு ஸாமத்தாலே]. ஸாம ஸங்க்ரஹமான ருக்கானது தனக்கு விவரணமுமாய் ரஸமுமா யிருந்துள்ள காநரூபமான ஸாமத்தாலே ரஸஸஹிதமாய் "ஹாவு ஹாவு ஹாவு" இத்யாதியான ஸ்தோபத்தாலே விஸ்த்ருதமானாப்போலே ருக்வேத ஸ்தாநீயமான திருவிருத்தம் நூறுபாட்டும் இசையிலே கூட்டினவாறே ஸாமவேத ஸ்தாநீயமாய் ஸரஸமா யிருந்துள்ள திருவாய்மொழி யாயிரம் பாட்டாகப் பரம்பிற்று.

52. [சந்தோகனென்று]. ஸாமம் அநேகவிதமாகையாலே திருவாய்மொழி எந்த ஸாமத்தோடொக்குமென்னில் ; சாந்தோக்ய ஸாமத்தோடொக்கும். "சாமவேதகீதனை" என்று திருமழிசைப் பிரானும் "சாமியப்பன்" என்று திருமங்கையாழ்வாரும் "ஸாம வேதோஸ்மி" என்று கீதாசார்யனுஞ் சொன்ன ஸாமம் ஸாமாந்யமாகாமல் "சந்தோகன் பௌழியனைந்தழலோம்பு தைத்திரியன் சாமவேதி" என்ற திருமங்கையாழ்வாரருளிச்செயலில் "சாமவேதி" என்று மேலே சொல்லாநிற்க முதலிலே 'சந்தோகன்' என்று சிறப்புறப் பிரித்துரைத்து "யாழ்பயில்நூல் நரம்பின் முதிர்சுவை" (திருவாய்மொழி) என்று யாழ்விஷயமாக அப்யஸிக்கப்படுவதான சாஸ்திரத்திற் சொன்ன லக்ஷணத்தையுடைய நரமபிலே பிறந்த பண்பட்ட ரஸமென்னும்படி காநஸ்வரூபம்போலே பரமபோக்யனானவன் என்று—காநஸாமாந்யமாகாமல் "பண்ணினின்மொழி யாழ்நரம்பில்பெற்ற பாலையாகி" (பெரிய திருமொழி) என்று அந்த சந்தோக ஸாமத்தின் நிறமான பாலையாகிற பண்ணையிட்டு விசேஷிக்கையாலே ‡ பச்வதிகரண ந்யாயத்தாலே "சாமவேதகீதன்" "சாமி" "ஸாமவேதோஸ்மி" என்ற விடங்களில்

‡ பச்வதிகரணந்யாயமாவது — வேதத்தில் பலவிடங்களில் "பசுநா யஜேத" [பசுவைக்கொண்டு யாகம பண்ணவேண்டும்] என்று சொல்லப் பட்டிருக்கிறது. நாற்கால் விலங்குகளெல்லாம் பசுவென்று சொல்லுதற் குரியவையாதலால் எந்த விலங்கு விவக்ஷிதம்? என்று ஸந்தேகம்வரின் இதர வாக்கியங்களைக்கொண்டு சாகபசுவே (ஆடாகிற விலங்கே) விவக்ஷிதமென்று மீமாம்ஸையில் நிர்ணயம் செய்யப்பட்டது. இதனால் பொதுவான ஒரு சப்தத்திற்குச் சிறப்பிலே பர்யவஸாநம் தெரிவிக்கப்பட்டது. இந்த ரீதியே இங்குங் கொள்ளப்படுவதாம்.

